# கல்கி

KALKI 5.10.2003 ரூ.6.00

திருடியைத் திருடிய நகரம்!

திருச்சி வாசகர்களுக்கு

ஆஹா!

ரூ.50,000 பரிசு!

# அடிச்சாங்க லக்கி பிரைஸ்!

# ரூ.50,000 பரிசு பெறும் பாண்டி வாசகர் யார்...? 88,89






திருச்சி மாவட்டக் கட்டுரைகள், படங்கள் :
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு, ஆர்.சி. ஜெயந்தன்




# ஆஹா! ரூ.50,000 பரிசு!

கோவை வாசகர்களுக்காக மட்டுமே **கல்கி** வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி

இது ஐந்தாவது கூப்பன்! கூப்பனைப் பூர்த்தி செய்யுமுன் கீழேயுள்ள விஷயங்களை மீண்டுமொருமுறை படித்துப் பார்த்துக் கொள்ளுங்கள். ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது மெகா வேலையல்ல; 'சிம்பிள் ஜாப்'தான்!

கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும்



ஆஹா! ரூ.50,000 பரிசு!

**கோவை குவிஸ் போட்டி கூப்பன் - 5**

1. அகழ்வாராய்ச்சி நடக்கும் கொடுமணல் என்ற கிராமம் .............. ஆற்றங்கரையில் உள்ளது.
2. டாப்ஸ்லிப்பிலிருந்து பரம்பிக்குளம் போகும் வழியிலுள்ள கன்னிமாரா பல நூறு ஆண்டு வயது கண்ட ஒரு ................................ மரம்
3. கொங்கு மண்டலத்தில் மாடுகளுக்குப் பெயர் போன ஊர்............................
4. இரண்டு ஜங்ஷன்களுக்கிடையே ஸ்டேஷன்களே இல்லாத இருப்புப்பாதை கோவைக்கும் ..............................க்குமிடையே உள்ளது.
5. காரமடை ரங்கநாதர் கோவிலில் மாசி மாதத்தில் நடைபெறும் '.................. சேவை' வெகு பிரபலம்.
6. கோவையிலுள்ள நிரந்தரத் தொழில் கண்காட்சி மைதானம் '.......................... டிரேட் ஃபேர் சென்ட்டர்'



12 அக்டோபர் இதழிலும் இதே போன்று குவிஸ் கூப்பன் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அக்டோபர் 20 தேதிக்குள் அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய கோவை மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, சென்னை, தி. நகர் **P.R.** ஜுவல்லரி வழங்கும் ரூ.120/- மதிப்புள்ள வெள்ளி காமாட்சி விளக்கு நூறு பேருக்குக் காத்திருக்கின்றன.



- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (கோவை)' என்று கட்டாயம் குறிப்பிட வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி கோவை மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு




# திரிகோண சௌந்தர்யம்!



**ம**லைக்கோட்டை உச்சிப் பிள்ளையார் கோயில். நேர் எதிரே மெயின்கார்டு கேட்டில் வானுயர்ந்த புனித லூர்து அன்னை பேராலயம். அங்கிருந்து மதுரை சாலையில் பிரமாண்டமும் பழைமையும் வாய்ந்த நத்தர்ஷா பள்ளி வாசல். மூன்று வழிபாட்டுத் தலங்களும் சுமார் ஐந்நூறு மீட்டர் அருகாமையில், முக்கோணத்தின் மூன்று புள்ளிகள் போல் அமைந்திருப்பதை 'திரிகோண சௌந்தர்யம்' என்று புகழ்ந்து தள்ளுகிறார்கள் திருச்சி வாசிகள்.

வாஸ்து சாஸ்திரப்படி, இதுபோன்ற அமைப்பு அமைவது மிக அபூர்வமாம். இப்படி இருப்பதால் திருச்சி மக்கள், இன, மத சண்டைகள் இல்லாமல் ஒற்றுமையாக வாழ்ந்து வருவார்களாம். திரிகோண சௌந்தர்ய ஆன்மிக அழகை, திருச்சி மலைக் கோட்டையில் ஏறி தரிசித்த 'திருடா திருடி' படத்தின் நாயகி சாயாசிங்கும் புகழ்ந்து தள்ளுகிறார்.

திருச்சிக்கும் பஞ்சாப் அழகி சாயா சிங்குக்கும் என்ன சம்பந்தம்? மேலும் விவரங்களுக்கு அட்டைப் படக் கட்டுரையைப் படியுங்கள்.

# கொடுத்து வைச்ச தலை!



✉ 'கல்கி'யின் சில இக்கட்டான கேள்விகளுக்கு, கலைஞர் சுற்றி வளைத்து தமக்கே உரித்தான நகைச்சுவை மிளிர பதில் கூறியுள்ளது வாசிக்கும்படி இருந்தது. அட்டைப் படக் கேள்விக்கு நேரடியான பதில் இல்லையென்றாலும், சமர்த்தாக வார்த்தை ஜாலம் காட்டியுள்ளார் கலைஞர்!

சென்னை - 91

கே.என். பாலகிருஷ்ணன்.




✉ சும்மா பரபரப்புக்காகக் கண்டபடி கேள்விகளைக் கேட்காமல், கல்கிக்கே உரிய பாணியில் மிகவும் அழகாகத் தொகுக்கப்பட்ட கேள்விகளுக்கு, தமக்கே உரிய பாணியில் பதில் சொன்ன கலைஞர் - ஒரு மினி ராக சங்கமம். ஆனால் கலைஞர் வி.எச்.பி வேறு, பி.ஜே.பி வேறு என்று சொன்னது தான் சார் கொஞ்சம் ஓவர்.

திருநெல்வேலி-11, எஸ்.ஆர். ஸ்வாமி.

✉ நம்மைச் சிரிக்க வைக்கும் சினிமாக் கலைஞர்கள் எல்லாம் ஒரு காலத்தில் சோகத்திலும், சோதனையிலும் ஆழ்ந்திருந்தவர்கள்தாம் என்பதை நாகேஷின் தொடர் உணர்த்துகிறது.

மதுரை - 7, வி.எஸ். கோவிந்தன்.

✉ 'ஹிந்து - 125!' தலையங்கம் என்னை வெகுவாக ரசிக்க வைத்தது. 'கற்றோரை கற்றோரே காமுறுவர்' என்ற வரிகள்தான் நினைவுக்கு வந்தன.

திருவண்ணாமலை, என். சண்முகம்.

✉ 'திரளும்... விலகும்' சிறுகதையின் நிகழ்வும் முடிவும் மனதை நெருடியது...

போடிநாயக்கனூர், எஸ்.எம். பாலசுப்ரமணியன்.

✉ விஸ்வம் எழுதிய 'விழியிலே ஒளியிலே' சிறுகதை வெகு கவிதைத்தனமாக புனையப்பட்டிருந்தது!

நெய்வேலி, சாந்திசுந்தர்.

✉ 'அச்சமின்றி ஜனநாயக மரபுகளைப் பாதுகாக்கவும், உள்ளடக்கத்தில் உண்மைக்கு மட்டுமே இடமளித்து நம்பகத்தன்மை காக்கவும், அனைத்துப் பத்திரிகைகளுமே உறுதி பூண வேண்டிய சமயம் இது!' என்ற வரிகள் அனைத்துப் பத்திரிகைக் காரியாலயங்களிலும் ஃப்ரேம் போட்டு மாட்டப்பட வேண்டிய 'நச் பஞ்ச்!'

நாகமலை, ப.கா. மணிமொழியன்.

✉ 'செஞ்சியார் - மம்தா' கார்ட்டூன் அபாரம். A true classical and marvellous joke of a high order.

சென்னை - 33, ஆர். கோபாலன்.

✉ நாத்திகனான என்னையும் பிரார்த்தனை செய்ய வைத்தது மொக்கராகவின் உருளு தண்டம். 'பாய்ஸ்' படத்தைப் பற்றிய விமர்சனத்தை, நயமாக வெளிப்படுத்திய "கல்கியின் சிறப்பியல்புக்குப் பாராட்டு.

திருபுவனம், அ.கோ. தமிழியன்.

✉ தின வாழ்வின் அவசரத்தில் யாராவது முகவரி விசாரித்தாலே பொறுமையிழந்து விடும் நாமெங்கே? ஏழை எளிய மக்களின் வாழ்க்கைக்காகத் தம்மையே அர்ப்பணித்துக் கொண்ட ஷோசியக்கா எங்கே?

திருச்சி - 9, எஸ். வாசகி.

✉ ஹூம்...! என்னவேணா சொல்லுங்கள். தலைநகரில் உள்ளவர்கள் கொடுத்து வைத்தவர்கள்தான். அமரர் கல்கி யின் பிறந்தநாள் விழா நிகழ்ச்சியின் தொகுப்பைப் படித்ததும் இப்படித் தான் நினைக்கத் தோன்றியது.

ஈரோடு - 1, ரேவதிப்ரியன்.



## வாழ்க மணமக்கள்

மும்பை டிலாய்ட் கன்சல்டிங் - பன்னாட்டு நிறுவனத்தில் ஆலோசகராகப் பணியாற்றுபவரும், BHEL, திருச்சிராப்பள்ளி தொழிற்சாலையின் முதுநிலை மேலாளர் (PRO) திரு. S. மகாலிங்கம் - திருமதி M. விஜயா தம்பதியரின் மூத்த புதல்வனுமான **சிரஞ்சீவி எம். ஜெயேந்திரசங்கர்** மற்றும் சென்னை டிசிஎஸ் நிறுவன மென்பியல் பொறியாளரும், (Late) வைத்யநாதன் - மாலதி தம்பதியரின் கனிஷ்ட குமாரி **சௌபாக்கியவதி ரம்யா** திருமணம் 31.8.2003 ஞாயிற்றுக் கிழமையன்று சென்னை அசோக்நகர் லக்ஷ்மிஹாலில் வெகு விமரிசையாக நடந்தேறியது. ஏராளமான நண்பர்கள், உறவினர்கள், பிரமுகர்கள், கலைஞர்கள் வந்திருந்து புதுமணத் தம்பதியினரை வாழ்த்தினர். திருமணத்துக்குப் பின்னர் 2.9.03 செவ்வாயன்று திருச்சி கைலாசபுரம் BHEL டவுன்ஷிப்பில் நடந்த வரவேற்பு வைபவத்திற்கும் திரளான நண்பர்கள் வந்து கலந்து கொண்டு சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!




# திருடியைத் திருடிய திருச்சி!

- சாயா சிங்

'திருடா திருடி' படத்துலே கதாநாயகி வாய்ப்புக் கிடைச்சதும், கண்ணை மூடவே முடியலை. கண்ணை மூடினாலே தனுஷ்கூட ஆஸ்திரேலியா, ஸ்விட்ஸர்லாந்துன்னு டூயட் பாடற மாதிரி ஃபாரின் கனவா வந்தா என்ன செய்ய?

''ஷூட்டிங் திருச்சியிலே''ன்னு டைரக்டர் சுப்ரமணியம் சிவா சொன்னதும் என்னோட அயல்நாட்டு டூர் கனவெல்லாம் 'புஸ்...'னு புகைஞ்சு போச்சு!

கதைப்படி நான் ஸ்ரீரங்கத்துப் பொண்ணு. தனுஷ் திருச்சிப் பையன். அதனாலே நான் திருச்சி போய்த்தானே ஆகணும்? மனசைத் தேற்றிக்கிட்டே திருச்சி போய்ச் சேர்ந்தேன்.

ஷூட்டிங் ஆரம்பிச்சது. ஜென்னி ரெஸிடென்ஸி ஹோட்டல்ல தங்கியிருந்தோம்.

முதல் நாள் மலைக்கோட்டை பிள்ளையார் கோயில் அடிவாரத்தில் ஷூட்டிங். சென்டிமென்டலா கணேஷ் வந்தனம். நான், தனுஷ், டைரக்டர்னு மொத்த டீமே சாமி கும்பிட்டுட்டு வந்தோம்.

மறுநாள் காவேரி நதியின் நடுவே இருந்த மணல் திட்டில் 'முத்தம் முத்தம்' பாடல் படப்பிடிப்பு. காவிரியில் ஆள் உயரத் தண்ணீர் இருந்ததாலே மாட்டு வண்டியிலே கூட்டிக்கிட்டுப் போனாங்க. முதல் தடவையா மாட்டு வண்டியிலே 'தடக் தடக்'னு பிரயாணம் செஞ்சது, ரொம்ப த்ரில்லிங்கா இருந்தது. 'பேக்அப்' சொன்னப்புறம்கூட, காவிரியை விட்டு வர மனசே இல்லை.

அப்புறம் திருச்சி பஸ் ஸ்டாண்ட், கலையரங்கம் தியேட்டர், காவேரிப் பாலம், மிஷன் ஆஸ்பத்திரி, வி.கே. என் கம்பெனி, பாலக்கரை லாரி ஷெட்னு முப்பத்தைஞ்சு நாள்



தொடர்ந்து ஷூட்டிங் நடந்ததுலே, திருச்சி ஏரியாவே அத்துப்படி ஆயிடுச்சு.

ரொம்ப முக்கியமான சந்தோஷம் கோயில் கோயிலா போனதுதான். மலைக்கோட்டை, ஸ்ரீரங்கம் கோயில், சமயபுரம் மாரியம்மன், திருவானைக் கோவில் என்று சாமி கும்பிட்டுவிட்டு வந்தது மனசுக்கு ரொம்ப ரம்யமா இருந்தது.



திருச்சியை விட்டுக் கிளம்பற அன்னிக்கு, மறுபடி மலைக்கோட்டைக்கு போனேன். உச்சியிலிருந்து கீழே பார்த்த போதுதான் திருச்சி எவ்வளவு அழகான ஊர்னு தெரிஞ்சது. தெப்பக்குளம், ஒரு சர்ச், ஒரு மசூதி மூன்றும் ∴ புள்ளி வைச்ச மாதிரி, முக்கோண வடிவில் அழகா நிற்க, இந்தத் திருத்தலங்களுக்கு மாலை போட்ட மாதிரி காவிரி பாயற அழகைப் பார்த்துக் கிட்டே நின்னேன். ஆஸ்திரேலியாவாவது, ஸ்விட்ஸர்லாந்தாவது.. திருச்சிதான் அழகு!

சந்திப்பு : **அனு**

வைகோ சிறை சென்றதிலிருந்து கட்சி விவகாரங்களின் சுமை, ம.தி.மு.க அவைத்தலைவர் எல். கணேசனை ரொம்பவே அழுத்துகிறது. மனிதர் படுபிஸி. ம.தி.மு.க.வுக்கு ஏற்படும் அரசியல் சங்கடங்களைத் தவிர்க்க அடிக்கடி தில்லிக்குப் பயணம் செய்கிறார். மத்திய அமைச்சர் கண்ணப்பன் கைது ஆவாரா என்ற பரபரப்பான சூழலில் எல். கணேசனுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டோம்.

**ஒரு வருடத்துக்கு மேலாக சிறையில் இருக்கிறார் வைகோ. இந்தச் சூழலில் மத்திய அமைச்சர் கண்ணப்பன், புலிகளுக்கு ஆதரவாகப் பேசி, இப்படி சிக்கலைக் கொண்டு வருவது சரியா?**

கண்ணப்பன் பேசியது ஜெயலலிதா



• கண்ணப்பன்

# தமிழருக்காகக் கண்ணீர் விடத் தடையா?



• எல்.கணேசன்

அம்மையார் உருவகப் படுத்துவது போல பிரச்னைக்குரிய பேச்சல்ல. ஜனநாயகம், மனித உரிமைகள் மறுக்கப்பட்டு வாழ்ந்து கொண்டிருக்கிற ஈழத் தமிழர்களுக்கு, தார்மிக ஆதரவு தருவது என்பது, அண்ணா காலத்திலிருந்து கடைப்பிடிக்கப்பட்டு வரும் நடைமுறை நெறி. அதன் பிரதிபலிப்புதான் கண்ணப்பனின் பேச்சு.

**இந்தியாவில் விடுதலைப்புலிகள் இயக்கம் தடை செய்யப்பட்டிருப்பதால் தானே, பொடா சட்டம் பாய்கிறது!**

சட்டப்படியாகவும் நுட்பமான அணுகுமுறையிலும் தார்மீக ஆதரவு என்பது குற்றமல்ல. 'ஆதரவு' என்பது பற்றி அந்தச் சட்டத்திலேயே சரியாக விளக்கப்படவில்லை. பேச்சு மட்டுமே ஆதரவு ஆகி விடாது. தடை செய்த இயக்கத்துக்கு ஆயுதம் கொடுப்பதும், ஆள் அனுப்பு வதும், நிதி கொடுப்பதும் குற்றமாகும். இந்தக் குற்றத்தை நாங்கள் ஒருபோதும் செய்ய மாட்டோம்.

**அப்படியானால் ம.தி.மு.க தலைவர்கள் மீது எடுக்கப்படும் நடவடிக்கைகளுக்கு அரசியல் காரணங்கள் இருக்கின்றன என்று சொல்கிறீர்களா?**

நிச்சயமாக. பிரதமர் வாஜ்பாய்க்கு வைகோ செல்லப்பிள்ளை போல் இருக்கிறார். வாஜ்பாய் பெயரைச் சொல்லி வாக்கு வாங்கி, ஆதரவுக் கடிதம் கொடுக்க ஜெயலலிதா தாமதம் செய்தபோது, அ.இ.அ.தி.மு.க கூட்டணியில் ஜெயித்தாலும், முதலில் சென்று ஆதரவைத் தெரிவித்தவர் வைகோ. அன்றிலிருந்தே வைகோ மீது ஜெயலலிதாவுக்குக் கோபம். அதுதவிர, மத்திய அரசை - குறிப்பாகப் பிரதமரை - ஜெ. நெருங்க முடியவில்லை. அதற்கு வைகோதான் தடையாக இருக்கிறார் என்று கற்பனை செய்து கொண்டு, ம.தி.மு.க - பா.ஜ.க உறவு நிலையில் கசப்பை உண்டு பண்ணப் பார்க்கிறார். அவரது முயற்சிகள் தோற்றுப் போகும்.

பா.ஜ.க தத்து வார்த்த ரீதியில் அ.இ.அ.தி.மு.க வுடன் உறவு கொள்ள நினைக்கிறது. ஆனால் தமிழ்நாட்டு தே.ஜ.கூ. கட்சிகளோ, வாஜ்பாயை விட்டு விடத் தயாராக இல்லை. இந்த நிலையில் ம.தி.மு.கவைக் கழற்றிவிட அ.தி.மு.க - பா.ஜ.க இரண்டுமே சேர்ந்து இப்படி ஒரு

சூழ்ச்சியில் இறங்கியிருக்கலாம் என்று கருதுகிறீர்களா?

சமீப காலமாக பா.ஜ.க.வின் உயர் மட்டத் தலைவர்களோடு மிகவும் நெருங்கித் தொடர்பு கொண்டதனால் என்னால் உறுதியாக, 'இதில் ஏதும் நீங்கள் சொல்வது போல சூழ்ச்சியில்லை என்று சொல்ல முடியும். வைகோ கைது சரியல்ல, என்று உச்ச நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்திருக்கிறது மத்திய அரசு! வைகோ விடுதலைக்கான மனுவில் கையெழுத்திட்ட 301 எம்.பிக்களில், மூன்றில் ஒரு பங்கு பா.ஜ.கவினர். அவர்களைக் கையெழுத்துப் போடப் பணித்தவர்கள் துணைப் பிரதமரும், சட்ட அமைச்சரும்.




* சர்ச்சைக்குள்ளான நூல் வெளியீட்டு விழாவில்...

**பா.ஜ.க உங்களுடன் ஒரு பாசப் பிணைப்பில் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். தற்போது தி.மு.க எந்த நேரத்திலும் தே.ஜ.கூவை விட்டு விலகும் நிலை இருக்கிறது. அப்போது நீங்களும் போய்விடக் கூடாது என்ற அடிப்படையில்தான் செஞ்சியாருக்கு அமைச்சர் பொறுப்பு கொடுத்து, பா.ஜ.கா உங்களைக் கட்டிப் போட்டு விட்டதா!**

இந்தப் பார்வை கொஞ்சமும் சரியல்ல; செஞ்சியாரின் உதவியாளர் செய்த குற்றத்துக்கு செஞ்சியார் எந்த விதத்திலும் பொறுப்பல்ல என்று துணைப்பிரதமரும், சி.பி.ஐ.யும் உணர்ந்து, அறிந்து கொண்டதால்தான் செஞ்சியாருக்கு மீண்டும் வாய்ப்புக் கிடைத்தது.

**தமிழகத்தில் பாராளுமன்றத் தேர்தலில் எப்படிப்பட்ட கூட்டணி அமையுமென்று நினைக்கிறீர்கள்?**

கூடியவர் பிரிவதும், பிரிந்தவர் கூடுவதும் தேர்தல் கூட்டணியில் சகஜம். எனவே இது குறித்து இப்போது எதுவும் சொல்வதற்கில்லை. டான்ஸி தீர்ப்பைப் பொறுத்து பல விஷயங்கள் முடிவாகும்.

**மத்திய அரசின் முடிவுக்குக் காத்திருக்காமல் தமிழக அரசு, கண்ணப்பனைக் கைது செய்யும் என்று கருதுகிறீர்களா?**

சட்டப்படிப் பார்த்தால் எந்த இடத்திலும் மத்திய அமைச்சரைக் கைது செய்வதைப் பற்றி தெளிவான வழிகாட்டுதல் இல்லை. அதையும் மீறி, ஜெ துணிந்து அது போன்ற நடவடிக்கையில் இறங்கினால், அது அரசியல் காரணங்களுக்காகவே இருக்கும். ஆனால் வைகோ விஷயத்தில் மத்திய அரசின் எதிர்ப்பைப் பெற்றுள்ள ஜெயலலிதா, மீண்டும் மத்திய அரசின் கண்டனத்துக்கு ஆளாக மாட்டார் என்று நினைக்கிறோம்.

பேட்டி: ப்ரியன்
படங்கள்: மீடியா ராமு




# கண்ணப்பன் கைது மிரட்டல்...

பா.ஜ.க.வுடன் தி.மு.க. கூட்டணி தொடருமா என்ற கேள்விக்கு, தி.மு.க. தலைவர் நேரடி பதில் தர மறுக்கலாம். பா.ஜ.க. ஆட்சிக்கு ஆதரவு அளித்த பிறகு, அடுத்த தேர்தல் நெருங்கு முன்னரே கூட்டணியைவிட்டு விலகுவது நியாயமல்ல என்றுகூட கருணாநிதி கருதலாம். ஆனால் தி.மு.க. தொண்டர்கள் என்ன நினைக்கிறார்கள்; செயற்குழுவின் சிந்தனை எந்தத் திசையில் செல்லும் என்பதற்கான அறிகுறி, ஆலடி அருணாவின் உரையில் தென்படுகிறது. விழுப்புரம் மாநாட்டில் பேசிய ஆலடி அருணா, பா.ஜ.க. பேரில் தி.மு.க.வுக்கு உள்ள அதிருப்திகளைப் பட்டியலிட்டு பகிரங்கப்படுத்தியிருக்கிறார். அந்த உரையைக் கேட்ட யாருமே, அடுத்த தேர்தலில் பா.ஜ.க. - தி.மு.க. கூட்டணி தொடராது என்றுதான் முடிவுக்கு வருவார்கள்.

இன்னொரு புறத்தில் பார்த்தால், திடீரென்று கண்ணப்பனைக் கைது செய்யும் தீவிரம் தமிழக அ.தி.மு.க. அரசுக்கு ஏற்பட்டிருக்கிறது. பொடாவின்கீழ் அவர் கைது செய்யப்படுவாரென்று எந்த நிமிடமும் நாம் எதிர்பார்க்கலாம்.

ஏற்கெனவே வைகோ சிறையிலிருக்க, கண்ணப்பனும் கைதானால், ம.தி.மு.க. மத்திய அரசுக் கூட்டணியிலிருந்து பிரிந்து வருவதற்கான அழுத்தம் அதிகரிக்கும். தேர்தல் நெருங்க, தி.மு.க. தேசிய ஜனநாயக கூட்டணியிலிருந்து விலகி விட்டால், அந்த இடத்தைப் பற்றிக் கொள்ள அ.தி.மு.க. கணக்குப் போட்டு காய்களை நகர்த்தி வருகிறது.



# கல்கி



2003 அக்டோபர் 5
சுபானு புரட்டாசி 18
மலர் : 62
இதழ் : 10

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




கண்ணப்பன் கைது மூலம் ம.தி.மு.க.வையும் பிரித்துவிட்டால், அ.தி.மு.க.வுக்கு தேசிய ஜனநாயகக் கூட்டணியில் பேரம் பேச நிறைய வலு கிடைத்து விடும். இரு கட்சிகள் வகித்த இடத்தை அ.தி.மு.க. ஒரு கட்சியே வகித்து, வரவிருக்கும் தேர்தலில் கூடுதல் தொகுதிகள் கேட்பதோடு, அமைச்சரவையிலும் கூடுதலான, முக்கியமான பொறுப்புகளுக்கு பேரம் பேசலாம்.

தமிழகத்தில் இப்படிப்பட்ட திட்டமிட்ட அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன என்பது காங்கிரஸ் மேலிடத்துக்கு எடுத்துரைக்கப்பட வேண்டியது மிக அவசியம். தனித்துப் போட்டியிட்டோ, அல்லது மூன்றாவது அணி அமைப்பதன் மூலமோ, நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் (தமிழகத்தில்) நிச்சயம் பெரிதாக சாதிக்க முடியாது. திராவிட கட்சியுடன் கூட்டணி வைத்துக் கொள்வதை கௌரவப் பிரச்னையாகக் கருதாமல், தி.மு.க.வுடன் கூட்டணி என்பது, புலிகள் ஆதரவு கட்சியுடன் கொள்ளும் கூட்டணி என்பதாகத் தவறான அபிப்பிராயத்துக்கு இடங் கொடாமல், காங்கிரஸ் விழிப்புடன் செயல்படுவது அவசியம். இல்லையேல், பாரதம் அடிப்படைவாத ஆட்சியின் அடுத்த சகாப்தத்துக்குள் அடியெடுத்து வைக்க நேரும்.

தமிழகத்தைப் பொருத்தவரையில், இன்று ஆட்சியிலுள்ள அ.தி.மு.க.வுக்கு மக்கள் ஆதரவைச் சுலபமாகப் பெற்றுவிடும் திறமை நிறையவே இருக்கிறது.

அரசு ஊழியர் வேலை நிறுத்த விவகாரத்தில் இவ்வரசு கடைப்பிடித்த சர்வாதிகாரப் போக்கு, சராசரி மக்களால் இன்னும் உணரப்படவேயில்லை. வேலை நிறுத்தம் ஒடுக்கப்பட்டதை ஒரு சாதனையாகவே அவர்கள் எண்ணுகின்றனர்.

முதல்வர் ஒரு பெண் என்ற போதிலும், அத்தனை பேரையும் தமது கட்டுக்குள் வைத்து ஆட்டிப் படைக்கிறார் என்கிற வியப்புணர்வு மக்களிடையே நிறையவே இருக்கிறது.

போதாக்குறைக்கு முதல்வர், ஊர் ஊராகச் சென்று கூறும் குட்டிக் கதைகள் மக்களை




நன்றாகவே மூளைச் சலவை செய்து அனுதாபம் சம்பாதித்துத் தருகின்றன.

அன்னதானமும் ஆயிரத்து ஐம்பத்து மூன்று திருமணங்களும் அரசின் 'ஆன்மிக'(!)ச் சாதனைகளாக மக்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றன. கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது எப்படி அரசின் சாதனை ஆக முடியும்...? இதுவும் சராசரி வாக்காளர்களுக்குப் புரியாது.

சென்னையில், கோட்டூர்புரத்தில் புதிய தலைமைச் செயலகம், மாமல்லபுரம் சாலையில் நிர்வாக நகரம், என்று இருபெரும் செலவினங்களைத் தமிழக மக்கள் தலையில் சுமத்துகிறது தமிழக அரசு. இவற்றிலிருந்து பத்துப் பைசா வருமானம் கிடைக்காது. ஆனால், இத்திட்டங்களின் பிரமிப்பும் பிரம்மாண்டமும், மக்களை மயக்கி வோட்டுப் பெற பயன்படுத்தப்படும்.

மொத்தத்தில், தமிழக மக்களை பிரமிப்பில் மூழ்கடிக்க ஆவன செய்யப்பட்டு வருகிறது. ஆகவே, அ.தி.மு.க.வுக்கு அரசியல் ரீதியான சவால் அமைய வேண்டுமானால், அது மூன்றாவது அணி மூலம் நேராது.

அ.தி.மு.க.வை ஆதரிக்காத மதச்சார்பற்ற சக்திகள் ஒருங்கிணைவதன் மூலம்தான் சாத்தியமாகும்.

தி.மு.க. அறிவித்துள்ள சிறை நிரப்பும் போராட்டம் தார்மிகப் போராகத் திட்டமிடப்படலாம்...

மூன்றாவது அணி என்பது மிகுந்த உயர் நோக்குடைய இலட்சியத் திட்டமாக இருக்கலாம்...

ஆனால், நடைமுறை என்பது வேறு.

வோட்டுகள் பிரிவதால் ஏற்படக்கூடிய விளைவுகளை ஏற்கெனவே நாம் பலமுறை பார்த்துவிட்டோம். மீண்டும் அதே தவறு நிகழாதிருக்க தலைவர்கள் மனம் வைக்க வேண்டும். காலம் தாழ்த்தாமல் திட்டமிட்டு, அடிப்படை வாதத்துக்கு எதிரான மதச்சார்பற்ற சக்திகளை ஒருங்கிணைக்க வேண்டும். தமிழகத்தில் மட்டும் அல்ல, பாரதம் முழுமைக்குமே ஹிந்துத்வாவுக்கு எதிரான பாரதத்வா என்ற ஒருங்கிணைப்புதான் இன்றைய தேவை. ●






# ஐலேஸா! ஐலஸா!

கோயில்களையும், சினிமாத் தியேட்டர்களையும் விட்டால் திருச்சியில் வேறு பொழுதுபோக்கு இடங்களே இல்லை என்று அலுத்துக் கொள்பவர்களுக்கு, திருச்சி தெப்பக் குளத்தில் ஜிலு ஜிலு ஆறுதல் கிடைக்கிறது.

'உலவும் தெப்பக் குளத்தினிலே... ஓடம் இதே... நாம் மகிழ... ஊஞ்சலாடுவோம்' என்று பாடிக்கொண்டே படகுச் சவாரி செய்யலாம். உதவி: தமிழ்நாடு சுற்றுலாத் துறை.

பத்துப் படகுகள் மட்டுமே இருப்பதால், விடுமுறை தினங்களில் கூட்டம் மொய்க்கிறது.

சரியான மழை இல்லாமல், ஊரே நிலத்தடி நீர்ப்பஞ்சத்தில் தவிக்கும்போது, படகுச் சவாரிக்கு மட்டும் குளத்தில் ஏது நீர்?

மலைக் கோட்டை மீது விழுகின்ற மழை நீர், குளத்தில் வந்து விழும் படியான வடிகால் வசதி இருக்கிறதாம்.

ஓ! ரெயின் ஹார்வெஸ்டிங்? ஐலேஸா! ஐலேஸா!






# பழத்தோட்டம் நடுவிலே புது பங்களா!



தமயந்தி மாதாஜியை டெலிபோனில் பிடித்தோம்! ''உங்க ஆசிரமத்தின் இப்போதைய நிலை குறித்து, பாசிட்டிவாக செய்தி வெளியிட விரும்புகிறோம், வரலாமா?'' என்றபோது "ஆல்வேஸ் வெல்கம்" என்றார். யாரிந்த தமயந்தி மாதாஜி? திருச்சி பாத்திமா நகரில் இருக்கும் பிரேமானந்தா ஆசிரமத்தின் இப்போதைய பொறுப்பாளர். ஆனால் நாம் ஆஸ்ரமம் போய்ச் சேர்ந்தபோது, தமயந்தி மாதாஜி எஸ்கேப்! பிரேமானந்தாவிடமிருந்து திடீர் அழைப்பு வந்ததால், அவரைப் பார்க்க வேலூர் மத்திய சிறைக்குப் போய்விட்டார். "உங்களை இன்னொரு முறை சந்திப்பதாகச் சொல்லச் சொன்னார்!" என்று வாசலிலேயே வழி மறித்துவிட்டார் வாச்மேன் தாத்தா. தமயந்திக்கு அடுத்த நிலையில் இருந்த துர்கா மாதாஜியும், இண்டர்காமில் இதையே கதைத்தார், இலங்கைத் தமிழில். ''அதனாலென்ன? ஆசிரமத்தில் என்ன நடக்கிறதென்று நாங்க சொல்றோம்'' என்றபடி முன் வந்தனர், அந்தப் பகுதி கிராம மக்கள்.

"ஆசிரமத்துக்குப் பழையபடி நிறைய வெளிநாட்டுக்காரங்க வந்து தங்குறாங்க. பிரேமானந்தாவுக்குத் தோட்டக் கலையிலே ஆர்வம் வந்துடுச்சுங்க. அதனாலே நூறு ஏக்கர்லே மா, பலா, கொய்யா, சப்போட்டா வைக்கச் சொல்லிட்டாரு. பழத்தோட்டத்துக்கு நடுவுலே புதுசா ஒரு பங்களா கட்டச் சொல்லியிருக்கார். தண்டனை முடிஞ்சு வந்ததும் அதுலேதான் தங்கப் போறாராம். அந்த பங்களாவுலே அண்டர்கிரவுண்ட் தியானக் குகையும் கட்டச் சொல்லியிருக்கார். சாமி வர்ற வரைக்கும் அதை அநாதை இல்லமா நடத்தப் போறதா, தமயந்தி மாதாஜி சொல்லிக்கிட்டு இருக்காங்க" என்கிறார்கள். தவிர இப்போது பிரேமானந்தா அறக்கட்டளை மூலம் நடத்தப்படும் உயர்நிலைப் பள்ளியில் மொத்தம் ஆயிரத்து இருநூறு மாணவர்கள் படிக்கிறார்கள். அதில் அறுநூற்று ஐம்பது பேர், சுற்று வட்டார கிராமங்களிலிருந்து வரும் மாணவர்கள். முந்நூற்று ஐம்பது பேர் அங்கேயே தங்கிப் படிக்கிறார்கள்.

பள்ளி முடிந்து வெளியே வந்த மாணவர்கள் சிலரை நிறுத்தி, பிரேமானந்தா எங்கேயிருக்கார் என்றோம். குறும்புப் பொடியன்கள் கொஞ்சமும் தயங்காமல் ''வேலூர் ஜெயில்லே!'' என்று கோரஸாக ராகம்பாடிச் சிரித்துக் கொண்டே நடையைக் கட்டினர்கள்.

விவரமான பசங்க டோய்...



# அன்பான வேண்டுகோள்!



சிவானந்த குருகுலத்தில் இருக்கும் சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், 60 முதியோர்களும் தீபாவளியை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொது மக்களிடம் உதவிக்கரம் நீட்டுகிறோம். பொது மக்கள் அளிக்கும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாகவோ அல்லது புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்பு, எண்ணெய், சீயக்காய், அரிசி, கோதுமை போன்ற தானிய வகைகளாகவோ நன்கொடை கொடுக்கலாம்.

**அனுப்ப வேண்டிய முகவரி :**

பொது செயலர் அவர்கள்,
சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்,
எண்.20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.

தொலைபேசி எண்கள் : 22391078, 22392444
பேக்ஸ் : 22791017
Email : sivanand@md2.vsnl.net.in
Website : www.buildhope.org

**பின் குறிப்பு :**

1. காசோலையாகவோ / டிராப்டாகவோ 'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்' என்ற பெயரில் தான் அனுப்ப வேண்டும் என்பதை கேட்டுக் கொள்கிறோம்.
2. நன்கொடைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு.
3. இந்தியன் வங்கி அனைத்து கிளைகளிலும் ஆசிரமத்திற்கு கமிஷன் இல்லாமல் இலவசமாக வங்கி வரைவோலை வழங்கப்படுகிறது.

ஜாதகம்கூட, சாதகமாகத்தானிருக்கிறது...

பெரிய அண்ணனுக்கு இந்தச் சம்பந்தத்தை எப்படியாவது முடித்துவிட வேண்டும் என்ற ஆசை.

அதனுடைய வெளிப்பாடுதான் ஜாதகம்கூட சாதகமாகத்தானிருக்கிறது... எனும் இந்தச் சிலேடைக் கூப்பாடு!

நடு அண்ணனுக்கு, இப்படியெல்லாம் பெண் பார்க்கிறேன் என்று பேர் பண்ணிக் கொண்டு மாசம் இரண்டு நடை.... யார் வீட்டிலாவது டிபன் சாப்பிடுவதில் கூச்சம்.

"யாரையாவது லவ் பண்ணித் தொலையேண்டா" என்பார்.

சின்ன அண்ணனைப் பொறுத்தவரையில் எடுப்பார் கைப்பிள்ளை. அழைத்தால் வருவார் அவ்வளவுதான்.

அக்கா, ஊருக்குப் புறப்பட்டு வருவதுதான், பிரசித்தம்.

முதல்நாள் ஃபோன் பண்ணிச் சொன்னால் போதும், கடலூரிலிருந்து தூக்கக் கலக்கத்தோடு காலையில் கதவைத் தட்டுவாள்.

இந்த மாயவரத்து சம்பந்தத்தை எப்படியாவது முடித்து விட வேண்டும் என்பதில் எல்லோரும் குறியாயிருக்க... தரகருக்கோ அது வெறியாகவே மாறியிருக்கிறது.

காரணம் எனக்கு, அதிகப்படியான வரதட்சணையாய் நகைகள் போட... இந்தக் குடும்பத்தைவிட, நல்ல ஏமாளி கிடைக்க மாட்டார்கள் என்கிற நம்பிக்கை அவருக்கு.

ஆனால் வீட்டிலோ "தம்பிக்கு சரியான பொண்ணு அமையலை!" என்று சால்ஜாப்பு சொல்வார்கள்.

பரம்பரையாய் விவசாயம் பண்ணி வந்த நாங்கள், பெற்றோர்களுக்குப் பின்பும்கூட விவசாயம் பண்ணத்தான் எத்தனித்தோம்.

காவிரிப் பிரச்னையில், அரசியல்வாதிகள் கட்சி பாகுபாடில்லாமல் தத்தம் தொழிலை அமோகமாய் சாகுபடி பண்ண... கானல் நீரில் விவசாயம் பண்ணமுடியாத காரணத்தால், சுய தொழிலில் இறங்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது!

சுயதொழில்தான் என்று முடிவாக, முதலீடுக்கு எங்கே போவது? காவிரித் தண்ணீர் எங்களைக் கைவிட்ட அளவுக்கு, நிலபுலன்கள் எங்களைக் கைவிடவில்லை. நல்ல விலைக்குப் போயின.

பெரிய அண்ணன் ஹவுஸிங் ஃபைனான்ஸ் பண்ண, நடு அண்ணன் கட்டடம் கட்டித் தரும் காண்ட்ராக்டராய் உருமாற... சின்ன அண்ணன் கட்டடம் கட்டத் தேவையான பொருட்களைக் கொள்முதல் செய்து கொடுக்க, நான் பக்க பலமாய் இருந்து வந்தேன்.

இவர்களின் தொழிலில் நீண்டகாலம் தாக்குப் பிடிக்க முடியாது என்கிற ஞானோதயம் எனக்கு வரவே.... எனது சொத்து பங்கிற்காக வாங்கிய பணத்தாலும், வெளியே வாங்கிய கடன் தொகையாலும் ஊரின் மையத்தில் மளிகைக் கடை வைத்து விட்டேன்.

வாங்கிய கடன்களிலிருந்து உடனடியாய் விடுபடுவதற்கான சாத்தியக்கூறு எதுவுமில்லைதான்.

குறைந்தது மூன்றாண்டுக் காலமாவது ஆகலாம். அதுவரையில் 'பேயிங் கெஸ்ட்' மாதிரி மாதம் ஓர் அண்ணன் வீட்டில் சாப்பிட்டு வருவது எனத் தீர்மானித்து, அதன்படி நடந்தும் வருகிறேன்.

மாடு மாதிரி கஷ்டப்பட்டு உழைத்து... வாங்கிய கடனுக்கு வட்டியும், கடைக்கு வாடகையும் வேலையாட்களுக்குச் சம்பளமும் கொடுக்க வேண்டும்.

மற்றபடி என்றைக்கிருந்தாலும் நல்ல நிலைக்கு வந்துவிடக் கூடிய எதிர்காலம் மிகக் கண்டிப்பாகயிருக்கிறது.

செலவுகள்கூட கட்டுப்படுத்தப்பட்ட தாகத்தான் இருக்கிறது. எனது கணக்கில் அடங்காத செலவு என்றால் அது... ஞாயிறு களில் பெண் பார்க்கும் வைபவத்திற்கு ஆகும் செலவைத்தான் சொல்ல வேண்டும்.

இன்றும் அப்படித்தான். மாயவரத்திற்கு டிபன் சாப்பிட, ச்சை... பொண்ணு பார்க்க பயணப்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

இரண்டு ஆட்டோக்களில் போய் இறங்கினோம்.

டிபன், காபி முடிந்ததும் பெண் வந்தாள்.

"உம் பேர் என்னம்மா?" அக்கா கேட்டதும்...

"யாழொளி" என்றாள்.

"இப்ப நா சொல்லப் போற விஷயத்தை நீங்க எப்படி எடுத்துக்கப் போறீங்கன்னு எனக்குத் தெரியல..."

"எனக்கு, நீங்க ஒரு ஹெல்ப் பண்ணணும். பண்ணுவீங்களா...?"

"நானா...உங்களுக்கா...?" என்றவளின் புருவங்கள் முடிச்சிட்டன.

"ஒண்ணுமில்ல... என்னைப் புடிக்கலைன்னு சொல்லிடுங்க..."

"ஏன்?"

"என்னோட வியாபாரச் சூழ்நிலை இப்ப கல்யாணம் பண்ணிக்கிற நெலமையில இல்ல... இப்பதான் கடனவுடன வாங்கி கடை ஆரம்பிச்சிருக்கேன். இன்னும் இரண்டு மூணு வருஷமாவும், நான் இந்தக் கடன்களிலிருந்து விடுபட... அதுவரைக்கும் கல்யாணம் காட்சின்னு இதுக்கு மேலேயும் கடன்பட எனக்கு விருப்பமில்ல. இதெல்லாம் எங்க வீட்டுப் பெரியவங்கக்கிட்ட சொல்லிப் பார்த்துட்டேன். ஆனா, நா சொல்ற காரணங்களை அவங்க யாரும் ஏத்துக்கறதாயில்ல. அப்படியே கடன் வாங்கிக் கல்யாணம் பண்ணினாலும், அது சந்தோஷ



இப்போதுதான் நானும் அவளைக் கூர்ந்து பார்க்கிறேன். போட்டோவில் பார்த்ததை விட, இன்னும் அழகாய்த்தான் இருக்கிறாள்.

இவளை எப்படி நிராகரிக்கப் போகிறேன்... என்கிற பயம், வந்துவிட்டது எனக்கு!

என் வீட்டாருடைய முகங்களிலும் டியூப் லைட் போட்டதுமாதிரி வெளிச்சம்!

பக்கத்திலிருக்கும் அக்காவை, ஒரு இடி இடித்தேன்.

"பொண்ணுக்கிட்ட கொஞ்சம் தனியா பேசணும்..."

"மாப்பிள்ளைப் பையன், பொண்ணுக்கிட்ட கொஞ்சம் பேசணுமாம்..." என்று முரசறிவித்தாள்.

"ஓ!" தகப்பனார் வழிகாட்ட, மாடிக்குப் போனோம்.

"யாழொளி... அழகான பேர்."

அவன் முகத்தில், செம்மை படர்ந்தது.

மாயிருக்காதுன்னு நெனைக்கிறேன். சரி, எளிமையா கல்யாணம் செஞ்சிக்கலாம்னாலும் எங்க குடும்பத்துல இருக்குறவங்க, கௌரவக் குறைவா நெனைக்கிறாங்க.

"ஒருவேளை கல்யாணம் பண்ணிக்கிட்டாலும் முதல் மாசமே வர்ற பொண்ணோட நகைய வாங்கி அடகு வைக்கணும் அல்லது விக்கணும்.

அப்படிச் செஞ்சா வர்ற பொண்ணும் என்னை மதிக்காது. பொண்ணு வீட்டுக்காரங்களும் என்னை மதிக்க மாட்டாங்க. அதனாலத்தான் சொல்றேன். என்னைப் பிடிக்கலேன்னு சொல்லிடுங்க, ப்ளீஸ்..."

"ஸாரி, எது எப்படியானாலும் பரவாயில்ல.. ஆனா என்னால இரண்டு மூணு வருஷமெல்லாம் காத்துக்கிட்டிருக்க முடியாது...!" என புன்னகை செய்தாள்.

அவள் சொன்னதன் அர்த்தம் புரிய, திகைத்துப் போனேன். ⊙

திருச்சி காந்தி மார்க்கெட்டில் அரிவாள்களை, கத்திரிக்காய்போல கூறுகட்டி விற்பதைப் பார்க்கலாம்.

கூறு கட்டி விற்றால் சில்லரை வியாபாரம் சீக்கிரம் நடக்கும் என்பது எங்கள் விற்பனை அனுபவம். இந்த மார்க்கெட்டில் அரிவாள் கத்திக்குக் கடை வைத்திருப்பது நான் மட்டும்தான். ஆறு சிறு அரிவாள் கத்திகளை ஒரு கூறு வீதம் கட்டி வைத்து, ரூபாய் ஐம்பதுக்கு விற்கிறேன். தனியே ஒரு கத்தி பத்து ரூபாய். கூறாக வாங்கிக் கொண்டால் பத்து ரூபாய் லாபம்." என்று கொஞ்சமும் சிரிக்காமல் சொல்லும் குமரவேல், அரிவாள் விற்கும் தமது கடையிலேயே விபூதி பாக்கெட்டுகளையும் விற்பது நல்ல முரண்.

காந்தி மார்க்கெட்டில் சிறு இடம் கிடைத்தால் கூடப் போதும், அங்கே ஒரு தரைக் கடை முளைத்து விடும். கேரளத்திலிருந்து கேரட் ஏற்றி வந்த லாரி, சுமையை இறக்கிவிட்டு காலியாக நிற்க, அதற்கு அடியிலேயே பூண்டு, பட்டை, என்று மசாலாப் பொருள்களை இரண்டு ரூபாய் வீதம் கூறு கட்டி, தரைக் கடை வைத்திருந்தார்கள் கீதாவும், அம்புரோஸூம்.

"லாரி கிளம்ப சாயங்காலம் ஆயிடும்ங்க. அதுக்குள்ளே வியாபாரத்தை முடிச்சிடுவோம்" என்கிறார்கள் இந்தக் கில்லாடிப் பெண்மணிகள்.

"மாநகராட்சியில் நேரடியாக வாடகை வசூல் செய்யப்படும் கடைகள் மொத்தம் எழுநூற்று நாற்பத்து ஏழு. தற்காலிகத் தரைக் கடைகள் நானூற்று ஐம்பத்து இரண்டு. மாநகராட்சியால் அனுமதிக்கப்பட்ட தரைக் கடைகள் அறுநூற்று ஐம்பத்து நான்கு, என காந்தி மார்க்கெட் இட நெருக்கடியில் மூச்சுத் திணறி வருகிறது" என்று புள்ளி விவரம் தருகிறார் பரம்பரை வியாபாரி சுப்ரமண்யம். "இந்த





# காந்தி மார்க்கெட், இறங்கு...!

ஏகப்பட்டக் குளறுபடிகள்'' என்கிறார் காந்தி. மார்க்கெட்டில் நான்காவது தலைமுறையாக இரவு நேரக் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார் பாலசுப்ரமண்யம்.

''1972க்குப் பிறகுதான் காந்தி மார்க்கெட்டில் நள்ளிரவு வியாபாரம் துவங்கியது. டிசம்பர் முதல் ஜூன் வரை இங்கே உள்ளூர்க் காய்கறிகளின் வருகை அதிகமாக இருக்கும். இரவு ஏழு மணிக்குத் தொடங்கி, அதி



• படுபிலி பிச்சைமுத்து



• அரிவாள் விற்கும் குமரவேல்

இட நெருக்கடியைத் தவிர்க்க வேண்டும் என்றுதான், காந்தி மார்க்கெட் எதிரில் இருந்த வெல்ல மண்டி குடோன் இடலில், இரவு நேரக்கடைகள் கட்டித் தரும்படி மாநகராட்சியிடம் கேட்டோம். அவர்களும் இருநூற்று நாற்பத்து நான்கு கடைகளைக் கட்டிக் கொடுத்தார்கள். ஆனால் ஆறுக்கு நான்கு அடி நீள அகலத்தில் கட்டித் தந்தனர். இதனால் கடைகளில் இன்னொரு ஆள் உட்கார்ந்து எழக் கூட முடியவில்லை. காந்தி மார்க்கெட்டில் பத்துக்குப் பத்து அகலத்தில் வியாபாரம் செய்து புழங்கிய வியாபாரிகள், இடப் பற்றாக்குறை காரணமாக இந்த இரவு நேரக் கடைகளைப் பயன்படுத்த முன் வராததால், அப்படியே கிடக்கின்றன. வெல்ல மண்டி குடோன்களை இடித்து அப்புறப்படுத்திவிட்டு, அகலமான கடைகளைக் கட்டித் தந்திருந்தால், காந்தி மார்க்கெட்டில் ஓரளவு இடநெருக்கடியைத் தவிர்த்திருக்க முடியும். ஆனால் மாநகராட்சி இந்தக் கடைகளின் கட்டுமானத்தைத் தனியாரிடம் காண்ட்ராக்ட் விட்ட வகையில்,




காலை மூன்று மணி வரை தென் மாநிலங்களிலிருந்து காய்கறிகள் வந்து கொண்டே இருக்கும். பாசுமதி அரிசி மட்டும் பஞ்சாபிலிருந்து தினசரி ஐந்து லோடுகள் வரும். உள்ளூரில் தக்காளி உற்பத்தி குறையும்போது, ஆந்திரத் தக்காளியை அனுமதிப்போம். இங்கே தக்காளி ஒரு கிலோ குறைந்த பட்சம் ஐம்பது பைசாவும், அதிகபட்சம் இருபத்து ஏழு ரூபாயும் விற்றுள்ளது. வெங்காயத் தட்டுப்பாடு வந்தபோது, ஒரு கிலோ ஐம்பத்து ஏழு வரை விற்றுள்ளது!'' என்கிறார் இங்கே கமிஷன் மண்டி வைத்திருக்கும் பிச்சைமுத்து.

'காய்கறிச் சந்தை' என்று அழைக்கப்பட்டு வந்த இந்தச் சந்தையை, காந்தி மார்க்கெட் ஆக்கியவர் : ராஜாஜி.

# ஸ்ரீ தேவியின் பேரருளைப் பெற நவராத்திரியில்

| நாள் | ஒன்பது பொருள்களைக் கொண்டு | ஒன்பது விதி மா கோலங்கள் போட வேண்டும் | சுமங்கலிகளுக்கும் கன்னி பெண்களுக்கும் நீராடக் கொடுக்க வேண்டும் | | சக்தியுள்ளவர்கள் பெண்களை வீட்டுக்கு அழைத்து நவராத்திரியில் கொடுக்கலாம் | வசதியற்றவர்கள் இவைகளைக் கொடுக்கலாம். |
|---|---|---|---|---|---|---|
| 1. | அரிசிமா | பொட்டு | பச்சிலை | எண்ணெய் | பொன் | சோழி |
| 2. | கோதுமைமா | கட்டம் | பூலாங்கிழங்கு | மஞ்சள் | வெள்ளி | குன்றிமணி |
| 3. | முத்து | மலர் | சண்பக மொட்டு | குங்குமம் | முத்து | தட்டைப் பவளம் |
| 4. | அட்சதை | படிக்கட்டு | கஸ்தூரி மஞ்சள் | பன்னீர் | பவளம் | கிளிஞ்சல் |
| 5. | கடலை | பறவையினம் | திரவியப்பட்டை | சந்தனம் | வைடூரியம் | செப்பு |
| 6. | பருப்பு | தேவிநாமம் | காசுக்கட்டி | வாசனைத் தைலம் | கோமேதகம் | பதுமை |
| 7. | மலர் | திட்டாணி | லாக்ஷரஸம் | நலங்கு மஞ்சள் | புஷ்பராகம் | அம்மானை |
| 8. | காசு | பத்மம் | கஸ்தூரிகா பத்ரம் | மருதோன்றி | மரகதம் | பந்து |
| 9. | கற்பூரம் | ஆயுதம் | கோரோஜனம் | புஷ்பநீர் | வைரம் | கழற்சிக்காய் |

# செய்ய வேண்டிய சில அனுஷ்டானங்கள்

| வீடு தேடி வரும் குமரிகளுக்கும், சமங்கலிகளுக்கும், பக்தியுடன் தன் கையால் பொட்டு இடலாம். | தினசரி காலை, மாலை கீழ்க்கண்ட ராகங்களில் ஸ்ரீ தேவி சம்பந்தமாக பாடலாம். | கீழ்க்கண்ட வாத்தியப் பின்னணிகளுடன் பாடலாம். | கீழ்க்கண்ட மலர்களைக் கொண்டு மாலை அணிவிக்கலாம். | கீழ்க்கண்ட தழைகளைக் கட்டு மாலைகளாகக் கட்டி சார்த்தலாம். | பெண் குழந்தைகளுக்கு ஒவ்வொரு நாளும் இவ்விதமாகக் கொடுக்கலாம். | பாலா என்னும் பருவச் சிறுமியின் மகிழ்ச்சிக்காக | கீழ்க்கண்ட பிரசாதங்களை விநியோகிக்கலாம். |
|---|---|---|---|---|---|---|---|
| புனுகு | தோடி | மிருதங்கம் | மல்லிகை | வில்வம் | வாழை | சுண்டல் | வெண்பொங்கல் |
| ஜவ்வாது | கல்யாணி | புல்லாங்குழல் | முல்லை | துளசி | மா | வறுவல் | புளியோதரை |
| கஸ்தூரி | காம்போதி | வீணை | சம்பங்கி | மரு | பலா | துவையல் | சர்க்கரைபொங்கல் |
| அரகஜா | பைரவி | கோட்டு வாத்தியம் | ஜாதி | கதிர்ப் பச்சை | கொய்யா | பொரியல் | கதம்பம் |
| சந்தானம் | பந்துவராளி | ஜல்லரி | பாரிஜாதம் | விபூதிப் பச்சை | மாதுளை | அப்பளம் | ததியோதனம் |
| குங்குமம் | நீலாம்பரி | பேரி | செம்பருத்தி | சந்தன இலை | நாரத்தை | வடகம் | தேங்காய்சாதம் |
| சாந்து | பிலஹரி | படகம் | தாழம்பூ | தும்பை இலை | பேரிச்சை | சூரணம் | எலுமிச்சம் பழம் சாதம் |
| ஸ்ரீசூர்ணம் | புன்னாக வராளி | கும்மி | ரோஜா | பன்னீர் இலை | திராட்சை | முறுக்கு | பாய ஸான்னம் |
| மை | வஸந்தா | கோலட்டம் | தாமரை | மருக் கொழுந்து | நாவல் | திரட்டுப் பால் | அக்காரஅடிசில் |

விநியோகிக்கவும்.

கத்தரி, ஜாங்கிரி, லட்டு, மைசூர்பாகு, சாக்லட் கேக், சோன் பப்டி, பாதுஷா, சம்சம் சம்பாக்களி, கோவா சேன்டிவிச் முதலியன.

கட்டிப்பருப்பு, திரட்டுப்பால், முள்ளு தேன்குழல் முதலியன.

தொலைபேசி : 24915662, 24914213

# 15 மெல்லினம்



பா. ராகவன்

செடியாகவும் இல்லாமல், மரமாகவும் உயர்ந்து ஓங்காமல் தடைப்பட்ட உயரத்துடன் காம்பவுண்டு சுவரை ஒட்டி வளர்ந்திருந்த அந்தக் கொய்யா மரத்தின் தாழ்ந்த கிளையின் மீது ஏறி அமர்ந்திருந்தான் ஜக்கு. ஒரு மரத்தின் கிளை தரக்கூடிய பரவசம் சாதாரண மானதில்லை. ஏறி அமரலாம். பிடித்துக் கொண்டு ஆடலாம். டபுள் அப்ஸ் செய்து பார்க்கலாம். மேலும் கனமாக வளர்ந்து நீளும் கிளை அளிக்கும் மன எழுச்சியும் மிக முக்கியமானது. கைக்கெட்டும் தூரத்தில் அது இருக்க வேண்டும். சுள் சுள் என்று கடிக் கிற எறும்புகள் மட்டும் ஒரு பொருட்டில்லை என்றால் ஜக்குவுக்கு அந்த கொய்யா மரத்தின் கிளை சிம்மாசனமே தான்.

இன்னும் காய்விடத் தொடங்காத கொய்யா மரம். விரைவில் அதில் பூக்கப் போகிறது என்பதற்கான சமிக்ஞைகள் அவனுக்குக் கிடைத்திருந்தன. அது பூத்து, காய்த்துக் கனியும் தினத்துக்காக அவன் காத்திருந்தான். எப்படியும் காய் விடுகிறபோது எங்கிருந்தாவது அணில்கள் வந்துவிடும். உள்ளங்கை அளவில் இருந்து கொண்டு அணில்கள் தான் என்ன வேகமாகப் பாய்ந்தோடும்! கிளையிலிருந்து கிளைக்குத் தாவும் லாகவம் ஒரு போதும் பிசகாத தொழில் நேர்த்தி படைத்த அணில்கள்.

ஒரு அணிலை சிநேகமாக்கிக் கொண்டுவிட முடியுமானால் உல கத்தில் வேறு எதுவுமே பிறகு வேண்டியிருக்காது. அணிலின் சிநேகிதம் வேகத்தைக் கற்றுக் கொடுக்கும். லாகவத்தைக் கற்றுக் கொடுக்கும். சுறுசுறுப்பைக் கற்றுக் கொடுக்கும். சுதந்தரத்தைக் கற்றுக் கொடுக்கும். வாழ்க்கையின் கனிந்த பகுதிகளை மட்டுமே தேடியெடுத்துச் சுவைக்கக் கற்றுக் கொடுக்கும்.

"தெரியுமா உனக்கு? எங்கப்பா ஜர்னலிஸ்டுங்கள்ளேயே ஒரு அணில் மாதிரி! ரொம்ப ஃபாஸ்டா மேட்டர் பண்ணுவார். எடிட்டருக்கு எங்கப்பான்னா ரொம்பப் பிடிக்கும். அவர் இன்டர்நேஷனல் அவார்டெல்லாம் வாங்குவார்னு சொல் லியிருக்கார்" என்று ஜக்கு சொன்னான்.

"ஓ" என்றாள் குட்டி.

பத்து நிமிடங்களுக்கு மேலாகிவிட்டது. அவள் ஜக்குவின் வாயையே பார்த்துக் கொண்டு, அந்தக் கிளையைப் பற்றியபடி மரத்தின் கீழே நின்று கொண்டிருந்தாள். இது கூடப் பொருத்த மாகத்தான் இருக்கிறது. ஜக்கு ஒரு மேதை. பெரிய சயிண்டிஸ்ட். மேலும் மந்திர சக்தி படைத்தவன். அவன் மரத்தின் மேல் ஏறி அமர்ந்திருப்பதுதான் சரி. அவன் அங்கிருந்தே பேசுவதும் தான் கீழே நின்று கேட்டுக் கொள்ளுவதும் மிகவும் பொருத்த மானது தான் என்று அவளுக்குத் தோன்றியது.

தன்னையும் மதித்து எத்தனை முக்கியமான விஷயங்களைப் பேசிவிடுவதென்று அவன் முடிவெடுத்திருக்கிறான்!

அந்த வயலட் புடைவை அணிந்த மேட்டுத் தெரு வெள்ளை ஆவி. நள்ளிரவில் ஜக்குவின் அப்பாவைச் சாப்பிடுவதற்காகக் காற்றில் மிதந்து வந்து ஜக்குவால் வாசலிலேயே தடுத்து நிறுத்தித் திருப்பி அனுப்பப்பட்டுக் கொண்டிருக்கிற பெண் ஆவி. அது ஏன் ஜக்குவின் அப்பாவை மட்டும் சாப்பிட விரும்புகிறது? அதைத்தான் அவள் அவனிடம் கேட்டிருந்தாள். அவனும் தக்கதொரு பதிலைச் சொல்லும் முகமாகத்தான் கொய்யா மரத்தின் கிளையின் மீது ஏறி அமர்ந்திருந்தான். யார் கண்டது? ஆவிகள் குறித்த அதி முக்கியமான ரகசியங்களை மரத்தின் கிளை மீதிருந்து சொன்னால் தான் கேட் பவர்களுக்கும் அதன் வீரியம் குறையாமல் மனத்தில் ஏறுமோ என்னவோ? எனக்கென்ன தெரியும்? ஜக்குவின் தீர்மானங்களே தனி. அத்தனை காரி யங்களுக்கும் ஒரு நியாயம் சொல்லிவிடக் கூடிய ஜக்கு. எல்லாம் சரி. கேள்விக்கு இன்னும் பதில் வந்தபாடில்லையே?

ஜக்கு தன் அப்பாவின் பெருமைகளைத் தான் அப்போதும் சொல்லிக் கொண்டிருந் தான். "அந்த மேட்டுத்தெரு பொண்ணு கூட ஜர்னலிஸ்டாகணும்னு தான் எங்கப்பா கிட்ட வந்திருக்கா. ஆனா பெரியமக்கு அவ. ஒண்ணுமே தெரியாது. பேட்டி எடுக்கவே தெரியாது. எழுதறதுக்கு சுத்தமா தெரி யாதுன்னு எங்கப்பாவே அவர் டைரில எழுதி வெச்சிருக்கார். அப்படிப்பட்ட வளுக்கு எந்தப் பத்திரிகை ஆபீஸ்ல வேலை குடுப்பா?"

"அடக்கஷ்டமே!"

"அதனால எங்கப்பா கண்டிப்பா பேசி அவளைத் திருப்பி அனுப்பிட்டார். ரொம்ப கெஞ்சிப்பார்த்திருக்கா. அவளுக்கு என் னன்னா, எங்கப்பா உதவியால ஜர்னலிஸ்ட் ஆயிட்டா ஈசியா சீஃப் மினிஸ்டரை யெல்லாம் பாக்கலாமே! பிரைம் மினிஸ்டர் மெட்ராஸ் வந்தா ஃபேர்ஸ்ட் ரோல சீட் கிடைக்குமே! புது சினிமாங்களுக்கெல்லாம் பாஸ் கூட கிடைக்கும். ஏ.ஆர்.ரஹ்மான் ம்யூசிக் ப்ரோக்ராமுக்கெல்லாம் கூப்பிடு வாங்க. பெரிய பெரிய போலீஸ் அபீசர் ஸெல்லாம் ஃப்ரெண்ட்ஸ் ஆயிடுவாங்க."

"ஐயோடா!" என்றாள் குட்டி. "இவ்ளோ இருக்கா?"

"பின்னே? ஜர்னலிஸ்டுன்னா என் னன்னு நினைச்சே? ரொம்பப் பெரிய போஸ்ட் அது. பத்துக்கோடில ஒருத்தர் தான் ஜர்னலிஸ்டா ஆக முடியும். எங்கப்பா அந்த மாதிரி!"

பெருமையுடன் சொல்லிவிட்டு அவ ளைப் பார்த்தான் ஜக்கு.

"ம்? அப்புறம்?"

"எங்கப்பா அவளை ஜர்னலிஸ்டா ஆக் கவே முடியாதுன்னு கண்டிப்பா சொல்லிட் டார் போலிருக்கு. ஒரு மக்கு எப்படி ஆக முடியும். அதனால தான்! அந்தக் கோவத் தோட அவ கிளம்பிப் போன போது ரோடுல ஆக்ஸிடெண்ட் ஆயிடுத்து. லாரியோ பஸ்ஸோ அடிச்சிருக்கு. செத்துப் போயிட்டா. சாகும்போது 'என்னை ஜர்ன லிஸ்டா ஆக்காத ஜக்குவோட அப்பாவை சும்மாவிட மாட்டேன்'னு சபதம் எடுத் துண்டு செத்துப் போயிருக்கா..."

"ஐயோ!" என்று கத்தினாள் குட்டி.

"உஷ்! சத்தம் போடாதே. இது ரகசியம். நீ யார்கிட்டயும் சொல்லமாட்டேன்னு பிராமிஸ் பண்ணியிருக்கே."

"சொல்ல மாட்டேண்டா. கண்டிப்பா சொல்ல மாட்டேன். இவ்ளோ பெரிய ப்ராப்ளத்துலேருந்து உங்கப்பாவை நீ எப்படிக் காப்பாத்தப்போறே?"

அவளுக்கு ரொம்பக் கவலையாகப் போய்விட்டது. உண்மையிலேயே ஜக்கு ரொம்பப் பெரிய பிரச்னையில் தான் இருக்கிறான்.

**வா**சலில் புடைவை வியாபாரி தன் வியாபாரங்களை முடித்துக் கொண்டு மூட்டை கட்டிவிட்டான்.

"நான் கிளம்பரேண்டா ஜக்கு. நீ ஒண் ணுத்துக்கும் கவலைப்படாதே. உனக்காக நான் பிள்ளையார்கிட்டே ப்ரே பண் ணிக்கறேன்" என்று சொல்லிவிட்டு அவள் கிளம்பினாள். அழுகையே வந்துவிட்டது போலிருக்கிறது. திரும்பி ஓடும்போது பாவாடையால் அவள் கண்ணைத் துடைத்துக் கொள்வதை ஜக்கு பார்த்தான்.

"க்ரேட்" என்றது குரங்கு.

"என்னது?"

"கரெக்டா நான் சொல்லிக் குடுத்த மாதிரியே சொல்லி அவளை அனுப் பிட்டியே? யு ஆர் வெரி ப்ரில்லியண்ட். இந்த விஷயத்தையெல்லாம் அந்தச் சின் னப் பொண்ணுகிட்ட போயி சொல்லலாமா நீ? உங்கப்பாவை அவ லவ் பண்ணினா. கல்யாணம் பண்ணிக்க இருந்தாங்க ரெண்டு பேரும். ஆனா அவளுக்கு ஃபாரின் போய் மேல் படிப்பு படிச்சு அமெரிக்கால வேலை பார்க்கணும்னு ஆசை. ரெண்டு பேருமா அமெரிக்கா போகலாம்னு சொன்னா; உங்கப்பா ஃபாரின் போக ஒத்துக்காததால அவ லவ்வை டிஸ்கண்டின்யு பண்ணிட்டு, தான் மட்டும் ஃபாரின் போயிட்டா. இவ்ளோ பெரிய கதையை நீ அவளுக்குச் சொன்னா புரியுமா? தவிர, ஒரு அப்பா லவ் பண்ணினார்ங்கறதை உன்னாலயே தாங்க முடியலையே, அவ எப்படி தாங் குவா? நேரா போயி அவம்மாகிட்ட சொல்லுவா. எதுக்கு வம்பு உனக்கு?"

"நீ சொல்றது சரிதான்" என்றான் ஜக்கு.

"ஆனா நீ யோசிச்சிப் பார்த்தியா?

---

*"சார்! சாந்தி நகர் எட்டாம் நெம்பர் வீட்ல திருடின ஆளு யாருன்னு கண்டு பிடிச்சுட்டேன்."*

*"அப்படியா? வெரிகுட், போய் உடனே மாமூல் வாங்கிட்டு வா...!"*

*- மலர் சூர்யா*

---

உங்கப்பா ஏன் ஃபாரின் போகமாட்டேன்னு சொல்லியிருப்பார்?"

"டைரில கொஞ்சூண்டு இருந்தது. எங்கப்பாவுக்கு எங்க தாத்தா, பாட்டியைத் தனியா விட்டுட்டுப் போக இஷ்டமில்லை. அவர் தாத்தா பாட்டிக்கு ஒரே பையன் இல்லியா?"

"கரெக்ட். நீ இப்ப உங்கப்பா அம்மாவுக்கும் அப்படித்தானே? உன்னை யாராவது அப்படி அப்பா, அம்மாவை விட்டுட்டு ஃபாரின் போறியான்னு கேட்டா என்ன சொல்லுவே?"

"ம்ஹூம். ஒத்துக்கமாட்டேன்!" உடனே உரக்க பதில் சொன்னான் ஜக்கு.

"அதான். அப்படித்தான். உங்கப்பாவோட டிசிஷன் கரெக்டுதானே அப்ப?"

"அதை யார் இல்லேன்னு சொன்னது? ஆனா எங்கப்பா எப்படி லவ் பண்ணலாம்? அவர் என்ன சினிமா ஹீரோவா? எவ்ளோ பெரிய ஜர்னலிஸ்ட் அவர்! அசிங்கமா லவ்



பண்ணலாமா?"

"கரெக்ட்" என்றது அது.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த வெங்கடாஜலபதி, சட்டென்று குரங்கைப் பார்த்து "வவ்வ்ஹ்.." என்றது.

"என்னவாம் அதுக்கு?"

"கல்யாணத்துக்கு முன்னாடி தானே லவ் பண்ணியிருக்கார். அப்புறம் பண்ணாத்தானே தப்புங்கறான் அவன்."

"அதெப்படி? வேற ஒரு பொம்பளையை லவ் பண்ணிட்டு உங்கப்பா எப்படி உங்கம்மாவைக் கல்யாணம் பண்ணிக்கலாம்? உங்கம்மாவுக்குத் தெரிஞ்சா கதறிடுவாளே? மட நாய்க்கு இதை எடுத்துச் சொல்லு" என்றது விக்கி.

"யாரைப் பார்த்து மடநாய்ங்கறே? நீ தான் முட்டாள். என் ஜக்குவைக் கெடுத்துண்டிருக்கே. எவ்வோ நல்லவனா, ஒரு கல்மிஷம் இல்லாம இருந்தான். ஒண்ணுமில்லாத விஷயத்தை ஊதிப் பெரிசாக்கிண்டிருக்கே நீ. எங்கேருந்து வந்து முளைச்சே? இரு, உன்னை ஒரு நாள் கடிச்சுக் கடாசிடறேன்!" கறுவிக் கொண்டது வெங்கடாஜலபதி.

"வெங்கட்! நீ அப்படியெல்லாம் பேசக்கூடாது. விக்கியும் என் ஃப்ரெண்டுதான். உன்னை மாதிரியே! ஒத்துமையா இருக்கணும். இல்லாட்டி நான் பர்மனென்டா உன் பேச்சு காய் விட்டுடுவேன்."

ஜக்குவின் எச்சரிக்கை வெங்கடாஜலபதியை அப்போதைக்குக் கட்டிப் போட்டது.

மறுநாள் பள்ளிக் கூடத்தில் குட்டிக்கு இருப்பே கொள்ளவில்லை. முந்தைய தினம் ஜக்கு சொன்ன விஷயங்களையே அவளது புத்தி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. பேய், பிசாசு, பூதம், கொள்ளி வாய்ப்பிசாசு, ராட்சஸன். இவற்றையெல்லாம் விட ஒரு ஆவி அத்தனை மோசமானதாக இருக்க முடியாது என்று அவள் நினைத்தாள். 'சூலம்' சீரியலில் வருகிற குட்டிச் சாத்தான்களும் மந்திரவாதிகளும்தான் எத்தனை கெட்டவர்களாக இருக்கிறார்கள்!

"ஏண்டி ஒரு மாதிரி இருக்கே? பேசவே மாட்டேங்கறே?" குட்டியின் பக்கத்தில் உட்கார்த்திருந்த ரஞ்சனா கேட்டாள். வகுப்பில் குட்டிக்கு இருந்த மிகச்சில தோழிகளுள் ஒருத்தி.

குட்டி யோசித்தாள். ரஞ்சனாவிடம் இதைச் சொல்லலாமா? உடனே ஜக்குவுக்கு செய்து கொடுத்த சத்தியம் ஞாபகத்துக்கு வந்து விட்டது. பயமாக இருந்தது. அதே சமயம் அது குறித்து, அல்லது எது குறித்தாவது பதைக்கப் பதைக்க ரஞ்சனாவிடம் சொன்னால் தனக்கே கொஞ்சம் ஆறுதலாக இருக்கும் போலிருந்தது.

"கேக்கறேனே? என்ன ஆச்சு உனக்கு?" விடாமல் கேட்டாள் ரஞ்சனா.

"ஒரு பயங்கரமான விஷயம் சொல்றேன். ரகசியமா வைச்சிருக்கியா?" என்றாள் குட்டி.

சட்டென்று அவள் குரலும் தாழ்ந்து விட்டது. "சொல்லு. ரகசியமா வெச்சுப்பேன்."

"நீ என்னிக்காவது ரத்தக்காட்டேரியைப் பார்த்திருக்கியா?"

"ஐயோ, இல்லியே?"

"என் ஃப்ரெண்ட் ஜக்கு தெரியுமில்லியா? அவன் பார்த்தான்."

"ஐயோ, நீ என்னடி சொல்றே?"

அவள் சொல்ல ஆரம்பித்தாள்.

(தொடரும்)

# உன்னைச் சரணடைந்தேன்

**ப்ளஸ்**

* வெட்டரிவாள், வீச்சரிவாள் சினிமா கலாசாரங்களுக்கிடையில் அழகான கதை.

* பெர்ஃபாமன்ஸில் கலக்கும் மீரா வாசுதேவன், இளவரசுவின் இயல்பு, புதிதாய்த் தெரியும் வெங்கட் பிரபுவின் நடிப்பு. கோபப்பட வைக்கும் சரண் கேரக்டர்.

* முதல் பாதிவரையிலான காமெடி.

* டமார், தடார் இசைகளுக்கு மத்தியில் எஸ்.பி.பியின் இதயம் நனைக்கும் இசை.

* 'காதலர்கள் எப்படிய்யா சேரப் போறாங்க?' என்று பல்ஸை அதிகரிக்க வைத்திருக்கும் திரைக்கதை.

**மைனஸ்**

* பேச்சு, பேச்சு, பேச்சு. முதல் காட்சியிலிருந்து இறுதிக் காட்சி வரை பக்கம் பக்கமாய்ப் பேசிக் கொண்டே இருக்கிறார்கள். (டைரக்டர் 'அண்ணி' டி.வி. தொடரை இயக்கியவராமே!)

* 'வண்டியை ஓட்டவே மாட்டாரா?' போன்ற இரட்டை அர்த்த வசனங்கள்.

* தன் நண்பனை காதலியுடன் சேர விடாமல் தடுத்ததற்குச் சரண் சொல்லும் அழுத்தமில்லாத காரணம்.

* பிரச்னைக்குத் தீர்வு காண, தமது கோடீஸ்வர அப்பாவைத் தொடர்பு கொள்ள முடியவில்லை என்று இந்த செல்ஃபோன் யுகத்தில் நாயகி சொல்லுவது.

**பின் குறிப்பு :** இயக்குனர் சமுத்திர கனிக்கு 'ஜூனியர் விசு' என்ற பட்டத்தை அளிக்கிறான் மொக்கராசு.

மொக்கராசு



## சிரித்து வாழ வேண்டும்

# வெள்ளிக் கோப்பை எங்கே?

10

நாகேஷ்



• படம்: யோகா

**எ**ன் மேலதிகாரி என்பதை மறந்து, ஆபீஸ் சூழ்நிலை என்பதையும் மறந்து, நான் சீனுவாச ஐயங்காரை நோக்கி, "என் டீக்காசை குடுடா!" என்று கத்திவிட்டேன்.

அதிர்ந்து போனார் ஐயங்கார்.

தம் கீழே பணிபுரிகிற ஒரு கிளார்க் தம்மை அவமானப்படுத்தி விட்டதை அவரால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

சட்டென்று தன் பாக்கெட்டுக்குள் கைவிட்டுத் துழாவினர். கையில் சில்லறை ஏதும் சிக்கவில்லை. அடுத்து, தன் பர்சை எடுத்துப் பார்த்தார். சில்லறை இல்லை. அவரது முகம் சுருங்கிப் போனது.

"சரி... விடு... இப்ப எதுக்கு நடு ஆபீஸ்ல இப்படி சத்தம் போடுறே? அமைதியா உட்காரு!"

"சரி... சரி! போனால் போகுது! பொல்லாத காசு! விட்டுத் தள்ளுங்க!' என்று நானும் குரலைத் தாழ்த்தினேன்.

உடனே அவர் ஏறிக் கொண்டார். 'உன்னை என்ன பண்ணுகிறேன் பார்!' என்ற தோரணையில் கிடுகிடுவென்று எங்கள் செக்‌ஷனை விட்டுப் புறப்பட்டுச் சென்றார் ஐயங்கார்.

**அ**க்கம்பக்கத்து சீட்காரர்கள், என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். "ஐயங்கார் மேலதிகாரியிடம் புகார் செய்யத்தான் போயிருக்கிறார். அடுத்து என்ன ஆகுமோ?' மெமோ கொடுத்து விடுவார்களோ..!" என்றெல்லாம் ஆளுக்கு ஆள் பேசினார்கள்.

ஆனால் நான் தைரியமாக இருந்தேன். காரணம், தன்மானம் உள்ள எந்த மனிதரும், தமக்குக் கீழே பணிபுரிகிற ஊழியர் தம்மை அவமானப்படுத்தியதாக, மேலிடத்தில் புகார் கொடுக்க முன் வர மாட்டார். அதுமட்டுமில்லாமல் 'அலுவலக வேலைக்கு அப்பாற்பட்ட, டீக்கடையில் காசு கொடுத்தது இதில் சம்பந்தப்பட்டிருப்பதால், மேலதிகாரியிடம் புகார் செய்தால், அய்யங்காருக்குத்தானே அவமானம்' என்கிற ரீதியில் நினைத்தேன்.

அடுத்த சில நிமிடங்களில் சஸ்பென்ஸ் உடைந்தது. ஐயங்கார் முகத்தில் கோபம் மறைந்து, சாதாரணமாகத் திரும்பி வந்தார். "இந்தாப்பா நாகேஸ்வரா! இனிமே உனக்கும், எனக்கும் எந்தவிதமான பேச்சுவார்த்தையும் கிடையாது. ஆபீஸ் வேலை விஷயமாக ஏதாவது பேச வேண்டியிருந்தால் பேசிக் கொள்ளலாம்" என்றார்.

நான் தலையை ஆட்டினேன்.

சில நாட்கள் சென்றன. அன்று ஐயங்காரைப் பார்க்க இரண்டு நண்பர்களோ அல்லது உறவுக்காரர்களோ வந்


* படம்: நன்றி பிலிம் நியூஸ் ஆனந்தன்

* 'இருளும் ஒளியும்' - படத்தில் நாகேஷ்

இருந்தார்கள். கூடவே ஒரு குழந்தையும் வந்திருந்தது. வந்தவர்களோடு பேசிக் கொண்டிருந்தாலும், ஐயங்காரின் முகத்தில் ஒரு விதத் தவிப்பு இருப்பதை நான் கவனிக்கத் தவறவில்லை. என் பாக்கெட்டில் கைவிட்டு, எட்டணா சில்லறையை எடுத்து, வந்திருப்பவர்களுக்குத் தெரியாமல், ஐயங்கார் பக்கம் நகர்த்தினேன். அதைக் கவனித்து, காசை எடுத்துக் கொண்டு, நன்றிப் பெருக்குடன் ஒரு பார்வை பார்த்துவிட்டு, வந்திருந்தவர்களை, "வாங்க... டீ சாப்பிட்டுக் கொண்டே பேசலாம்" என்று சொல்லி கேன்டீனுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

அதன் பின் நானும், ஐயங்காரும் ராசியாகிவிட்டோம். ஆனாலும், அவ்வப்போது எங்களுக்குள் உரசல்கள் வரும். அதையெல்லாம் அவ்வப்போது சொல்கிறேன்.

எனக்கு ஒரு ராசி உண்டு. எனக்கு ஓர் அங்கீகாரம் கிடைக்கிறபோது, அதைப் பற்றி மற்றவர்கள் விசாரிக்க வேண்டும் என்று என் மனசு நினைக்கும். ஆனால், ஒருவரும் அதைக் கண்டு கொள்ளவே மாட்டார்கள்.

உதாரணத்துக்கு, எம்.ஜி.ஆர் கொடுத்த கோப்பையையே சொல்லலாம். நாடகத்தில் வயிற்று வலிக்காரராக நடித்து, எம்.ஜி.ஆரே பாராட்டி கோப்பையைக் கொடுத்து விட்டார். அதை எடுத்துக் கொண்டு, நாடகம் நடந்த டவுன் கோகலே ஹாலிலிருந்து நடந்தே புறப்பட்டேன். கோப்பையை ரோட்டில் போகிறவர்கள் கண்ணில் படும்படி பிடித்துக் கொண்டு, மவுண்ட் ரோடு முழுக்க நடந்தே வந்தேன்.

"அட! என்ன கோப்பை இது? யார் கொடுத்தாங்க? எதற்காகக் கொடுத்தாங்க" என்று யாராவது கேட்க வேண்டும் என்று எதிர்பார்த்தேன். அப்படி யாராவது கேட்கும் பட்சத்தில், நாடகத்தில் ஒரே காட்சியில் நடித்து, எம்.ஜி.ஆர் கையால் கோப்பை வாங்கின விஷயத்தைச் சொல்லத் துடித்தேன். கேட்டவர் பொறுமையோடும், ஆர்வத்தோடும் இருந்தால், நடு ரோட்டிலேயே வயிற்றுவலிக்காரராக நடித்துக் காட்டவும் தயாராக இருந்தேன். ஆனால் என் துரதிருஷ்டம்! ஒரு பயல், கோப்பையைப் பற்றி விசாரிக்கவில்லை.

வழியில் ஒரு போலீஸ்காரர் தலையைக் கண்டதும் பயம். இவர், ஏது கோப்பை? என்று கேட்டு நான் 'நடிப்புக்காக எம்.ஜி.ஆர் கையால் வாங்கிய பரிசு' என்று சொன்னால், அவர் நம்பாமல், "டேய்! நல்லா நடிக்கிறியே! எங்கே திருடினே? சொல்லு! என்று இரண்டு தட்டு தட்டிவிடுவாரோ என்று பயம் பிடித்துக் கொண்டது. கோப்பையைச் சட்டைக்குள் மறைத்துக் கொண்டேன்.

யாருமே கோப்பையைப் பற்றிக் கேட்கவில்லையே என்ற வருத்தத்துடன் அறைக்கு எடுத்துக் கொண்டு வந்து, பரிசுக் கோப்பையை அலமாரியில் கம்பீரமாக நிறுத்தி வைத்தேன். தினமும் ரசித்தேன். கற்பனையில் மிதந்தேன்.

சில மாதங்களுக்கு பின், ஒரு நாள் மாலை என் அறைக்கு வந்தபோது, எனக்கு ஷாக்! பரிசுக் கோப்பையின் மரத்தாலான அடிப்பகுதி மட்டும் வைத்த இடத்தில் இருக்க, மேலே இருக்க வேண்டிய வெள்ளிக் கோப்பையைக் காணோம்!

(சிரிப்பு தொடரும்)

# ஆஹா!

# ரூ.50,000 பரிசு!



திருச்சி

வாசகர்களுக்காக
மட்டுமே

# கல்கி

வழங்கும் கலக்கல்
குவிஸ் போட்டி

ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது ரொம்ப ரொம்ப 'சிம்பிள்'!

கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும் 12, 19, 26 அக்டோபர் மற்றும் 2, 9 நவம்பர் இதழ்களிலும் இதே போன்று குவிஸ் கூப்பன்கள் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய திருச்சி மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனமான அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை வழங்கும் ரூ.85/- மதிப்புள்ள 'சோ' எழுதிய 'எங்கே பிராமணன்?' புத்தகம் - 120 நபர்களுக்கு.



- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (திருச்சி)' என்று குறிப்பிட வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி திருச்சி மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.



## ஆஹா! ரூ. 50,000 பரிசு! திருச்சி குவிஸ் போட்டி கூப்பன் - 1

1. 1995 செப்டெம்பரில் திருச்சி மாவட்டத்திலிருந்து பிரிக்கப்பட்ட மாவட்டம் ..........................
2. மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையாரும், ஸ்ரீரங்கநாதரும் இங்கு கோயில் கொள்ளக் காரணமான இராமாயணக் கதாபாத்திரம் ..................................
3. திருச்சிக்கு அருகிலிருக்கும் ........................ ஒரு காலத்தில் சோழர் தலைநகராக இருந்தது.
4. தினமும் உச்சிக்கால பூஜையில் அர்ச்சகர் பெண் உடை அணிந்து பூஜை செய்யும், திருச்சிக்கு அருகிலுள்ள கோயில்...................................
5. திருவாரூர் தேருக்குச் சக்கரங்கள் செய்து கொடுத்தது, திருச்சியைச் சேர்ந்த .............................. நிறுவனம்.
6. கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றியதாகக் கூறப்படும் ஆலயம் ..............................




# 'பாய்ஸ்' பற்றி ஸ்ரீரங்கத்து பாய்ஸ்!

*'பாய்ஸ்' திரைப்படமும் வசனங்களும் அநாகரிகத்தின் எல்லைகளைத் தொட்டு உழல்வதை உலகமே கண்டித்து வருகையில், வசனகர்த்தாவின் சொந்த ஊரான ஸ்ரீரங்கத்து 'தேவன்கள்' என்ன நினைக்கிறார்கள்...?*

**ஸ்ரீதர் (எம்.சி.ஏ) இறுதியாண்டு**

'குஷி' படத்தில் 'கட்டிப்புடி கட்டிப் புடிடா' பாடலுக்கு யாரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை! அந்தப் பாடல், நடனம் இரண்டிலுமே அருவெறுப்பான ஆபாசம் இருந்தது. ஆனால் 'பாய்ஸ்' படத்தில் சர்ச்சைக்குரிய காட்சிகள் மொத்தமே நாலுதான். அதுவும் கதையோடு ரொம்ப சரியா ஒட்டி வருது. சுஜாதாவுக்கு இத்தனை வயசுல இளமையா வசனம் எழுதத் தெரிஞ்சிருக்கு. அதற்கு ஏன் இவ்வளவு பெரிய



எதிர்ப்புன்னு புரியலே! படத்துலே, படிக்கிற வயதில் கல்யாணம் செய்துகிட்டா, வீட்டிலே ஆதரவு சுத்தமா கிடைக்காது. படிப்பும் பாதியிலே நின்னு போகும். இதை எதிர்கொள்ள தைரியம் இருந்தா மட்டும் காதலி, இல்லேன்னா பொத்திக்கிட்டுப் போன்னு பொட்டுலே அடிச்ச மாதிரி, ஷங்கர் அருமையா மெசேஜ் சொல்றார். இன்னிக்கு பொண்ணுங்க பின்னாடி லோலோன்னு அலையிற படிக்கிற பசங்களுக்குச் சரியான சவுக்கடி. இளைஞர்களுக்கான படம்னா இப்படித்தான்யா இருக்கணும்.

**ஸ்ரீராம் (எம்.சி.ஏ இறுதியாண்டு)**

ஷங்கர் தம் மனைவி, அப்பா, அம்மா, சகோதரிகளோட இந்தப் படத்தைத் திரையரங்கிலே போய்ப் பார்த்துட்டு வர முடியுமா? சுஜாதா தமது மகளோடு போய் இதைப் பார்க்க




• ஜெயப்பிரகாஷ் • ஸ்ரீராம் • ஸ்ரீதர் • ஷங்கர் • ஆனந்த் • பிரகாஷ்

முடியுமா? இவங்க ரெண்டு பேரும் மேசேஜ் சொல்றோம்னு கிளம்பி, நமக்குன்னு இருக்கிற எல்லைகளைத் தாண்டி, யாரு கிட்டே அவார்டு வாங்கப் போறாங்க? உண்மையான அவார்டு என்னை மாதிரி ரசிகர்கள் தியேட்டர்லே மனப்பூர்வமா தட்டுற கரகோஷம்தான். எத்தனை இடத்துலே முகத்தைத் திருப்பிக்க வேண்டியிருக்கு? சுஜாதா கம்ப்யூட்டர் பாடங்களைத் தமிழாக்கம் செய்யறதோட நிறுத்திக்கிட்டா பரவாயில்லே. அது மாணவ, மாணவிகளுக்குப் பயன்படும். படத்துலே அவர் எழுதின பல வார்த்தைகளுக்கு இரண்டு அர்த்தம் தெரிகிறது. தலையிலே அடிச்சுக்கலாம் போல இருக்கு!

### ஷங்கர் (பி.எஸ்.சி இரண்டாமாண்டு)

பாய்ஸ், நாட் ஒன்லி ஃபார் பாய்ஸ்! படிக்கிற பொண்ணுங்களும் கட்டாயம் பார்க்க வேண்டிய படம். அவங்களுக்குத்தான் இதுலே அதிக மேசேஜ் இருக்கு. எவ்வளவு நாளைக்கு கிராமப் பஞ்சாயத்து, டூயட், வில்லன், சேஸிங்னு காட்டிக்கிட்டு இருப்பீங்க! சகிக்கலை. பாய்ஸ்லேயும்தான் டூயட் இருக்கு. ரீசைக்கிள் பண்ண வேண்டிய பொருட்கள் எல்லாம் பல உருவங்களாகி, ஹீரோ, ஹீரோயின்கூட வந்து ஆடுது. இதுலே கிராஃபிக்ஸ் கலக்கல் ஒரு பக்கம்ன்னா, சுற்றுச்சூழல் விழிப்புணர்ச்சியை இதை விடப் பிரமாதமா ஊட்ட முடியும்ன்னு தோணலை. நிஜ வாழ்க்கையிலே நடக்கிறதெல்லாம் சினிமாவா எடுத்தா அது டாக்குமெண்டரி, ஆனால் சத்தியமா 'பாய்ஸ்' ஒரு சூப்பர் படம்! அந்தப் படம் பார்த்ததுலேர்ந்து, பஸ்லே படியிலே போறதையே நிறுத்திட்டேன்.

### ஆனந்த் (எம்.சி.ஏ இரண்டாமாண்டு)

யதார்த்தத்தை மீறாமல் சில காட்சிகள் இருக்கிறதாலே, நிறையப் பேர் மடியிலே நெருப்பைக் கட்டிக்கிட்ட மாதிரி குதிக்கிறாங்க. நம்மில் பலரால் இதை ஏத்துக்க முடியாதது துரதிருஷ்டம்ன்னுதான் சொல்லணும். ஜவுளிக் கடையிலே நடுத்தர வயதுப் பெண்கள் மேலே, பசங்க இடிக்கிற மாதிரி ஒரு காட்சி வருது! சத்தியமா சொல்றேன். அந்த மாதிரித் தப்பு பண்றவன், இந்தப் படத்தைப் பார்த்துட்டா, மறுபடி அது மாதிரி பண்ணத் தயங்குவான். படத்தைப் பார்க்குற பெண்களும், நெரிசலான பகுதியிலே கவனமா இருப்பாங்க. என்னைப் பொருத்த வரைக்கும் ஷங்கர் நல்லாத்தான் காட்சிகளை அமைச்சிருக்கார். சுஜாதா மட்டும்தான் கொஞ்சம் எல்லை மீறி வசனம் எழுதியிருக்கார். இப்போ இருக்கிற பையன்கள் சிலரைக் கூப்பிட்டு, ''இது மாதிரி எழுதி இருக்கேன். ஓகேவா?''ன்னு ஒரு வார்த்தை கேட்டிருந்தா, அவரே பல டயலாக்குகளுக்குக் கத்தரி வெச்சிருப்பார். பாவம்... அதுக்கெல்லாம் அவருக்கு நேரமில்லே போல இருக்கு... ரெங்கா! ரெங்கா!

பின்குறிப்பு: பிரசாத், ரெங்க பிரசாத் இருவரும் 'பாய்ஸ்' பற்றிச் சொன்னவை 'கல்கி' தணிக்கைக் குழுவால் வெட்டப்பட்டு விட்டன.




ESTD 1947

பருக பருக ஆனந்தம்! அதிக ஆனந்தம்!

சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காப்பிக்கு

# ஜீவா காபி

**வழங்கும் ஸ்பெஷல் தீபாவளி பரிசு!**

எங்களிடம் **4** கிலோ காபி பவுடர் மொத்தமாகவோ, சில்லறையாகவோ வாங்கி, கூப்பனைத் திருப்பித் தந்து ஒரு காப்பர் பாட்டம் கடாய் இலவசமாகப் பெறுங்கள்! இச் சலுகை அக்டோபர் **31** வரை மட்டுமே!

**Contact :**
**FREE HOME DELIVERY**
**28444725/28442667**
**(Chennai)**

திருமணங்கள் மற்றும் அனைத்து விசேஷங்களுக்கும்

**100% பியூர் பில்டர் காபி பவுடர்**

தயாரிப்பாளர்கள்:

## ஜீவா காபி ஒர்க்ஸ்

28, பி.வி. நாயக்கன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

டெல்லி, மும்பை, கொல்கத்தா. E-mail:sales@jeevacoffee.com

---



# S.V.முதியோர் இல்லம்



**Charitable Trust (Reg)**

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

**Charitable Trust (Reg)**

# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)
Arumbakkam, Chennai - 600 106 Tel. Off: 2475 5700, 2475 1356.
E-mail:svhome@vsnl.net

# சிவகாமியின் சபதம்

## முப்பதாம் அத்தியாயம்

## வாதாபிப் பெரும் போர்

வெகு காலமாய் இல்லாத வழக்கமாக அஜந்தாவில் கலை விழா நடந்து, அரை குறையாக முடிவுற்று ஒரு மாதத்துக்கு மேல் ஆயிற்று.

அந்த ஒரு மாதமும் வடக்கேயிருந்து வாதாபியை நோக்கி விரைந்து வந்த சளுக்க சைனியத்துக்கும், தெற்கேயிருந்து படையெடுத்து வந்த பல்லவ சைனியத்துக்கும் ஒரு பெரிய போட்டிப் பந்தயம் நடந்து கொண்டிருந்தது.

வாதாபியை முதலில் யார் அடைவது என்கின்ற அந்த விரைவுப் பந்தயத்தில் பல்லவ சைனியமே வெற்றியடைந்தது.

வழியில் யாதொரு எதிர்ப்புமின்றித் தங்கு தடையில்லாமல் பொங்கி வரும் சமுத்திரத்தைப் போல் முன்னேறி வந்த அந்தப் பல்லவ சேனா சமுத்திரமானது, சளுக்க சைனியம் வடக்கே இன்னும் ஆறு காத தூரத்தில் இருக்கும்போதே வாதாபியை அடைந்து, அந்த மாபெரும் நகரத்தின் கோட்டை மதிலை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டது.

திடீரென்று முன்னெச்சரிக்கையில்லாமல் நேர்ந்த அந்தப் பெரு விபத்தினால் வாதாபி மக்கள் கதிகலங்கிப் போனார்கள்.

புலிகேசிச் சக்கரவர்த்தியின் வீர சௌரிய பராக்ரமங்களையும் அவருடைய புகழானது கடல்களுக்கப்பாலுள்ள தூர தூர தேசங்களிலெல்லாம் பரவியிருப்பதையும் எண்ணிப் பெருமிதத்துடனிருந்த வாதாபியின் மக்கள் தங்கள் நாட்டின் மீது இன்னொரு நாட்டு அரசன் படையெடுத்து வரக்கூடும் என்று கனவிலும் கருதவில்லை.

**அமரர் கல்கி**

சற்றும் எதிர்பாராத சமயத்தில் களங்கமற்ற வானத்திலிருந்து விழுந்த பேரிடி போல் வந்த பல்லவப் படையெடுப்பு, அவர்களுக்கு பிரமிப்பையும் திகைப்பையும் உண்டாக்கியது.

நகரில் அச்சமயம் சக்கரவர்த்தி இல்லை என்பதும் கோட்டைப் பாதுகாப்புக்குப் போதுமான சைனியமும் இல்லையென்பதும், ஜனங்கள் எல்லோருக்கும் தெரிந்திருந்தன. இதனால் நகர மாந்தரில் பெரும்பாலோர் என்றும் அறியாத பீதிக்கு உள்ளாயினர்.

பௌத்தர்களிடம் விரோத பாவம் கொண்டிருந்த சமணர்கள், சைவர்கள், சாக்தர்கள் ஆகியோர், "அஜந்தாக் கலைவிழா உண்மையிலேயே பௌத்தர்களின் சதியாலோசனைச் சூழ்ச்சி" என்று பேசிக் கொண்டார்கள்.

பொதுமக்களின் கோபத்தாக்குதலுக்கு உள்ளாகாமல் பௌத்த விஹாரங்கள், பௌத்த மடங்கள் ஆகியவற்றைக் காப்பாற்றும் பொருட்டு, வாதாபிக் கோட்டைத் தலைவன் பீமசேனன் மேற்படி விஹாரங்களுக்கும் மடங்களுக்கும் விசேஷக் காவல் போட வேண்டியதாயிற்று.

அதோடு ஜனங்களின் பீதியைப் போக்கித் தைரியம் ஊட்டுவதற்காகச் சக்கரவர்த்தியிடமிருந்து அவசரத் தூதர்கள் மூலமாக வந்த திருமுக ஓலையை, வாதாபி நகரின் நாற்சந்திகளில் எல்லாம் தளபதி பீமன் வாசிக்கப் பண்ணியிருந்தான்.

சக்கரவர்த்தி, அந்தத் திருமுகத்தில் நர்மதைக் கரையிலுள்ள மாபெரும் சளுக்கர் சைனியத்துடன் தாம் வாதாபியை நோக்கி விரைந்து வந்து கொண்டிருப்பதாகவும், வேங்கி நாட்டிலிருந்து இன்னொரு பெருஞ் சைனியம் வந்து கொண்டிருப்பதாகவும், ஒருவேளை தாம் வருவதற்குள்ளே பல்லவ சைனியம் வாதாபியை அடைந்து முற்றுகையிட்டு விட்டால் அதற்காக நகர மக்கள் மனம் கலங்க வேண்டாம் என்றும், பல்லவ சைனியத்தை நிர்மூலம் செய்து வாதாபியைக் கூடிய சீக்கிரம் முற்றுகையிலிருந்து விடுதலை செய்வதாகவும் உறுதி கூறியிருந்தார்.

மேற்படி திருமுகத்தை நாற்சந்திகளில் படிக்கக் கேட்ட பிறகு வாதாபி மக்கள் ஒருவாறு பீதி குறைந்து தைரியம் பெற்றார்கள்.

நர்மதை நதிக்கரையிலிருந்து சளுக்கப் பெரும் படையுடன் புலிகேசிச் சக்கரவர்த்தி வாதாபிக்கு நாலு காத தூரத்தில் வந்து சேர்ந்தபோது தமக்கு முன்னால் பல்லவ சைனியம் வாதாபியை அடைந்து கோட்டையைச் சூழ்ந்து கொண்டது என்ற விவரம் அறிந்தார். உடனே பிரயாணத்தை நிறுத்திக் கொண்டார். வேங்கி சைனியம் வழியிலே பல காடு மலை நதிகளைக் கடந்து வர வேண்டியிருந்தபடியால், அது வந்து சேர இன்னும் சில காலம் ஆகும் என்றும் தெரியவந்தது. இந்த நிலைமையில் புலிகேசிச் சக்கரவர்த்தி தமது மந்திரிகளையும் படைத் தலைவர்களையும் கலந்தாலோசித்து உடனே போர் தொடங்காமல் சிலநாள் காத்திருக்க முடிவு செய்தார். வேங்கி சைனியமும் வந்து சேர்ந்த பிறகு பல்லவ சைனியத்தை ஒரு பெருந்தாக்காகத் தாக்கி நிர்மூலம் செய்து விடுவது என்றும், அதுவரையில் அப்போது வந்து சேர்ந்திருந்த இடத்திலேயே தங்குவது என்றும் தீர்மானித்திருந்தார்.

ஆனால், அவருடைய தீர்மானங்களை நிறைவேற்றுவதற்குப் போர்க் கலையில் மகா நிபுணர்களான மாமல்லச் சக்கரவர்த்தியும் சேனாபதி பரஞ்சோதியும் இடங்கொடுக்கவில்லை.

முதலிலே வாதாபிக் கோட்டையைத் தாக்குவதா அல்லது புலிகேசியின் தலைமையிலுள்ள சளுக்கப் பெரும் படையைத் தாக்குவதா என்ற விஷயம் பல்லவ சேனைத் தலைவர்களின் மந்திராலோசனைச் சபையில் விவாதிக்கப்பட்டது.

வந்த காரியம் வாதாபியைக் கைப்பற்றுவதேயாதலால், உடனே கோட்டையைத் தாக்க வேண்டுமென்று மானவன்மரும் அச்சுதவர்மரும் அபிப்பிராயப்பட்டார்கள்.

வேங்கி சைனியம் வருவதற்குள்ளே புலிகேசியைத் தாக்கி ஒழித்துவிட வேண்டும் என்றும், வாதாபிக் கோட்டை எங்கேயும் ஓடிப் போய் விடாதென்றும், அதன் முற்றுகை நீடிக்க நீடிக்கப் பிற்பாடு அதைத்

தூக்கிப் பிடிப்பது சுலபமாகி விடுமென்றும் சேனாபதி பரஞ்சோதி கூறினார்.

ஒற்றர் தலைவன் சத்ருக்னன் சேனா பதியை ஆதரித்தான்.

மாமல்லரும் அந்த யோசனையையே முடிவாக ஒப்புக் கொண்டார்.

எனவே, வாதாபிக் கோட்டையின் முற்று கைக்கு ஒரு சிறு படையை மட்டும் நிறுத்தி விட்டு, பல்லவ சைனியத்தின் மற்றப் பெரும் பகுதி வடக்கு நோக்கிக் கிளம்பிற்று.

இதையறிந்த புலிகேசிச் சக்கரவர்த்தி இனித் தாம் பின்வாங்கிச் சென்றால் சளுக்க சாம்ராஜ்யத்தின் மதிப்பு சின்னாபின்னமாகி விடும் என்பதை உணர்ந்து போருக்கு ஆயத்தமானார்.

வாதாபிக்கு வடக்கே மூன்று காத தூரத்தில் இரு பெரும் சைனியங்களும் கைகலந்தன.

அந்தக் காட்சியானது கீழ் சமுத்திரமும் மேல் சமுத்திரமும் தங்குதடையின்றிப் பொங்கி வந்து ஒன்றோடொன்று மோதிக் கலந்ததைப் போலிருந்தது.

மூன்று பகலும் இரவும் கோரமான யுத்தம் நடந்தது.

ஆயிரம் பதினாயிரம் வீரர்கள் வாளால் வெட்டுண்டும் வேல்களால் குத்துண்டும் போர்க்களத்தில் மாண்டு விழுந்தார்கள்.

வீர சொர்க்கம் அடைந்தவர்களின் சவங் கள் - கால் வேறு கை வேறு தலைவேறான உயிரற்ற உடல்கள், - போர்க்களத்தில் மலை மலையாகக் குவிந்தன.

இறந்த யானைகளின் உடல்கள் ஆங் காங்கு கருங் குன்றுகளைப் போல் காட்சி தந்தன.

மனிதர் உடல்களின் மீது குதிரைகளின் உடல்களும், குதிரைகளின் சவங்கள் மீது மனிதர்களின் பிரேதங்களுமாகக் கலந்து கிடந்தன.

மரணாவஸ்தையிலிருந்த மனிதர்களின் பரிதாப ஓலமும், யானைகளின் பயங்கரப் பிளிறலும் குதிரைகளின் சோகக் கனைப்பும், கேட்கச் சகிக்காத கோரப் பெருஞ் சப்தமாக எழுந்தது.

போர்க்களத்திலிருந்து இரத்த ஆறுகள் நாலா பக்கமும் பெருக்கெடுத்துப் பாய்ந்து ஓடின.

அந்த உதிர நதிகளில் போர் வீரர்களின் வெட்டுண்ட கால் கைகள் மிதந்து சென்றது பார்க்கச் சகிக்காத கோரக் காட்சி யாயிருந்தது.

லட்சக்கணக்கான வீரர்களும் ஆயிரம் பதினாயிரக்கணக்கான யானைகளும் குதிரைகளும் ஈடுபட்டிருந்த அந்த மாபெரும் யுத்தத்தை நடந்தது நடந்தபடி வர்ணிப்பது நம்மால் இயலாத காரியம்.

வால்மீகியையும் வியாசரையும் ஹோமரையும் கம்பரையும் போன்ற மகா நாடக ஆசிரியர்களுக்குத்தான் அதன் வர் ணனை சாத்தியமாகும்.

போரின் ஆரம்பத்திலிருந்தே ஒருவாறு கட்சிகளின் பலம் தெரிந்துவிட்டது. போர்க்கலையின் நுட்பங்களை அறிந் தவர்கள், போரின் முடிவு என்ன ஆகும் என்பதை ஊகித்துணர்வதும் சாத்தியமா யிருந்தது.

வாதாபிக்கருகில் தங்கிச் சிரம பரிகாரம் செய்துகொண்டு பூரண பலத்துடனும் அள வில்லா உற்சாகத்துடனும் போரில் ஈடு பட்ட பல்லவ சைனியத்தின் பெருந் தாக்குதலுக்கு முன்னால், நெடுந் தூர இடைவிடாப் பிரயாணத்தினால் களைப்புற்றிருந்த சளுக்க சைனியம் போர்க்களத்தில் நிற்பதற்கே திணறி யது.

சளுக்க சைனியத்தின் பிரதான யானைப் படை வேங்கியில் இருந்தபடியால் அது வந்து சேராதது சளுக்க சைனியத்தின் பலக் குறைவுக்கு முக்கியக் காரணமா யிருந்தது.

மூன்றாம் நாள் காலையில் பல்லவ சைனியத்தின் வெற்றியும் சளுக்க சைனி யத்தின் தோல்வியும் சர்வ நிச்சயமாகத் தெரிந்துவிட்டது.

அன்று மத்தியானம், சளுக்க தளபதி களும் மந்திரிகளும் புலிகேசிச் சக்கர வர்த்தியைச் சூழ்ந்துகொண்டு, சாம்ராஜ் யத்தின் நன்மைக்காக அவர் பின்வாங்கிச் சென்று எங்கேயாவது ஒரு பத்திரமான இடத்தில் வேங்கி சைனியம் வந்து சேரும் வரையில் காத்திருக்க வேண்டும் என்று வற்புறுத்திச் சொன்னார்கள்.

அதைத் தவிர வேறு வழியில்லையென் பதைக் கண்டு சக்கரவர்த்தியும் அதற்குச்

சம்மதித்தார். சேதமாகாமல் மீதமிருந்த குதிரைப் படையின் பாதுகாப்புடன், அன்றைய தினம் அஸ்தமித்ததும் சக்கரவர்த்தி பின்வாங்கிச் செல்ல வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

ஆனால், மேற்படி முடிவைக் காரியத்தில் நிறைவேற்ற அன்று சாயங்காலம் ஒரு பெரும் இடையூறு ஏற்பட்டது. மானவன்மரால் விசேஷப் போர்ப் பயிற்சி அளிக்கப்பட்டிருந்த பல்லவக் களிற்றுப் படையைக் கடைசியாக உபயோகிப்பதென்று வைத்திருந்து அன்று சாயங்காலம் ஏவி விட்டார்கள்.

ஐயாயிரம் மத்தகஜங்கள் துதிக்கைகளிலே இரும்பு உலக்கையைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டு சளுக்கர் குதிரைப் படை மேல் பாய்ந்தபோது, பாவம், அந்தக் குதிரைகள் பெரும் பீதியடைந்து நாலாபுறமும் சிதறி ஓடின. அந்தக் குதிரைகளை விட வேகமாக எஞ்சியிருந்த சளுக்க வீரர்கள் ஓடினார்கள்.

அவ்விதம் புறங்காட்டி ஓடிய சளுக்க வீரர்களைப் பல்லவ வீரர்கள் துரத்திக் கொண்டு ஓடினார்கள்.

அந்த மூன்றாம் நாள் இரவு முழுவதும் ஓடுகிற சளுக்க வீரர்களைப் பல்லவ வீரர்கள் துரத்திச் சென்று வேட்டையாடுதல் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

மறுநாள் சூரியோதயமானபோது, மூன்று தினங்கள் கடும் போர் நடந்த பயங்கர யுத்த களத்தில், இறந்து போன சளுக்கரின் உடல்களைத் தவிர உயிருள்ள சளுக்கர் ஒருவராவது காணப்படவில்லை.

வெற்றி முரசுகள் முழங்க, சங்கங்கள் ஆர்ப்பரித்து ஒலிக்க, ஜயகோஷங்கள் வானளாவ, ஒரே கோலாகலத்துக்கு மத்தியில் பல்லவ சக்கரவர்த்தியும் அவருடைய தளபதிகளும் ஒருவருக்கொருவர் வாகை மாலை சூடியும் வாழ்த்துக் கூறியும், பல்லவ சேனை அடைந்த மாபெரும் வெற்றியைக் கொண்டாடினர். எனினும், அவ்வளவு கோலாகலமான கொண்டாட்டங்களுக்கு மத்தியில் அவர்களுடைய உள்ளத்தில் ஒரு சிறு கவலை குடி கொண்டிருந்தது. அது சளுக்க சக்கரவர்த்தி புலிகேசியின் கதி என்னவாயிற்று என்ற கவலைதான். வாதாபிச் சக்கரவர்த்தி போர்க்களத்தில் இறுதி வரை நின்று போராடி உயிரிழந்து விழுந்து வீர சொர்க்கம் அடைந்தாரா, அல்லது சளுக்க வீரர் பலர் புறங்காட்டி ஓடிப் போனதைப் போல் அவரும் ஓடி விட்டாரா என்பது தெரியவில்லை. போர்க்களத்தில் அவர் விழுந்திருந்தால் மாபெருஞ் சக்கரவர்த்திக்குரிய மரியாதைகளை அவருடைய உடலுக்குச் செய்து கௌரவிக்க வேண்டும். ஒரு வேளை அவர் ஓடிப் போயிருந்தால், மறுபடியும் படை திரட்டிக் கொண்டு போருக்கு வரக் கூடுமல்லவா?

இப்படி நடந்திருக்குமா அப்படி நடந்திருக்குமா என்று வெகு நேரம் விவாதித்த பிறகு, அதைப் பற்றி மேலும் விவாதிப்பதில் பயனில்லையென்ற முடிவு ஏற்பட்டது. சத்ருக்னனுடைய தலைமையில் போர்க்களமெல்லாம் நன்றாகத் தேடிப் பார்த்துப் புலிகேசியின் உடல் கிடைத்தால் எடுத்து வருவதற்கு ஏற்பாடு செய்துவிட்டு, மாமல்லரும் மற்றவர்களும் வாதாபியை நோக்கித் திரும்பினார்கள்.

## முப்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## பிக்ஷுவின் சபதம்

வாதாபிக் கோட்டைக்கு வெளியே சற்று தூரத்தில் காபாலிக மதத்தாரின் பலி பீடம் இருந்தது என்பதை நேயர்கள் அறிவார்கள்.

வாதாபிப் பெரும் போர் முடிவுற்றதற்கு மறுநாள் இரவு அந்த காபாலிகர் பலிபீடத்துக்குச் சமீபத்தில் ஒரு பயங்கர சோக நாடகம் நடைபெற்றது.

கிழக்கே அப்போதுதான் உதயமாகிக் கொண்டிருந்த சந்திரனின் கிரணங்கள் மரங்களின் வழியாகப் புகுந்து வந்து மொட்டை



மொட்டையாக நின்ற பாறைகள் மீது விழுந்த போது, அந்தக் கறுத்த பாறைகளும் அவற்றின் கறுத்த நிழல்களும் கரிய பெரிய பேய்களின் உருவங்களைக் கொண்டு, அந்தப் பாறைப் பிரதேசத்தைப் பார்ப்பதற்கே பீதிகரமாகச் செய்து கொண்டிருந்தன.

பாறைகளின் ஓரமாகச் சில சமயம் நிழல்களில் மறைந்தும் சில சமயம் நிலா ஒளியில் வெளிப்பட்டும் ஒரு கோரமான பெண் உருவம் வந்து கொண்டிருந்தது. அந்த உருவம் தோளின் மீது இன்னொரு உடலைச் சுமந்து கொண்டு நடந்தது.

அந்த உடல் விறைப்பாகக் கிடந்த விதத்திலிருந்து அது உயிரற்றது என்பதை எளிதில் ஊகிக்கலாம்.

அவ்விதம் தோளிலே பிரேதத்தைச் சுமந்து கொண்டு நடந்த பெண் உருவமானது நிலா வெளிச்சத்தில் தோன்றியபோது, அதன் நிழல் பிரம்மாண்ட ராட்சஸ வடிவங் கொண்டு, ஒரு பெரும் பூதம் தான் உண்பதற்கு இரை தேடி எடுத்துக் கொண்டு வருவது போலத் தோன்றியது.

சற்று அருகில் நெருங்கிப் பார்த்தோமானால், அந்தப் பெண் உருவம் கற்பனையில் உருவகப்படுத்திக் கொள்ளும் பேயையும் பூதத்தையும் காட்டிலும் அதிகப் பயங்கரத் தோற்றம் அளித்தது என்பதை அறியலாம்.

கறுத்துத் தடித்த தோலும், குட்டையான செம்பட்டை மயிரும், அனலைக் கக்கும் கண்களுமாக அந்தப் பெண் உருவம் காவியங்களில் வர்ணிக்கப்படும் கோர ராட்சஸிகளைப் பெரிதும் ஒத்திருந்தது.

ஆனால், அந்தப் பெண் பேய் தன் தோளில் போட்டுக் கொண்டு சுமந்து வந்த ஆண்

உருவம் அத்தகைய கோர மான உருவமல்ல. இராஜ களை பொருந்திய கம்பீர முகத் தோற்றம் கொண்டது!

அது யார்? ஒருவேளை...?

மேற்கூறிய கோர ராட்சஸி ஒரு பாறையின் முனையைத் திரும்பிய போது, எதிரில் யாரோ வருவது கண்டு திடுக்கிட்டுத் தயங்கி நின்றாள். அவள் திடுக்கிட்டதற்குக் காரணம் என்ன? பயமா? அவளுக்குக் கூடப் பயம் உண்டா? அல்லது வேறு ஏதேனும் காரணமா?

எதிரே வந்த உருவம் சிறிதும் தயங்காமல் மேலும் வந்து கொண்டிருந்தது. அருகில் நெருங்கி வந்ததும், "ரஞ்சனி, நீதானா?" என்று புத்த பிக்ஷுவின் குரல் கேட்டது.

அந்தக் கோர ராட்சஸியின் பெயர் "ரஞ்சனி" என்று அறிந்து நமக்கு வியப்பு உண்டாகிறதல்லவா? ஆயினும், அந்தப் பெண் ஒரு காலத்தில் "ரஞ்சனி" என்னும் அழகிய பெயருக்கு உரியவளாய், பார்த்தவர்



கண்களை ரஞ்சிக்கச் செய்பவளாய், அவர்கள் உள்ளத்தை மோகிக்கச் செய்பவளாய்த்தான் இருந்தாள். அவளை இம்மாதிரி கோர வடிவங் கொண்ட காபாலிகையாகச் செய்தவர் புத்த பிக்ஷுதான் என்பதை முன்னமே அவருடைய வாய்மொழியினால் தெரிந்து கொண்டிருக்கிறோம்.

பிக்ஷுவின் குரலைக் கேட்டதும், காபாலிகையின் திகைப்பு இன்னும் அதிகமானதாகத்



## அருள்வாக்கு

சுத்த உபவாஸம் என்றால் முழுப் பட்டினி என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். 'உபவாஸம்' என்றால் 'கூட வஸிப்பது'. பகவானோடு கூட, அவனுக்குப் பக்கத்தில் ஒட்டிக் கொண்டு வஸிப்பதுதான் உபவாஸம். அன்றைக்கு வயிற்றில் ஒன்றையும் தள்ளாவிட்டால்தான் அப்படி அவனோடு கூட, கிட்டக்க வஸிக்க முடியும். மனஸ் அவன் கிட்டக்கவே கிடக்க வேண்டுமானால் அதற்கு முதலில் வயிறு வெறுமனே கிடக்கணும். சாப்பிட்டால் வயிற்றிலே 'கட புடா'. வேலை செய்ய முடிவதில்லை. மனஸையும் எதிலேயும் நிறுத்த முடிவதில்லை. வயிறு அடைசலில்லாமலிருந்தால் நன்றாகப் பிராணாயாமம் பண்ணி மனஸை சுத்தி செய்து கொண்டு ஒரு முகமாக நிறுத்த முடியும். பெரிசாக முச்சடக்கிக் கும்பகம் பண்ண வேண்டுமென்றில்லா விட்டாலும், தடைப்படாமல் தீர்க்கமாக ச்வாஸம் விடும்படியிருந்தால்தான் மனஸ் தியானத்தில் நிற்கும். வயிற்றில் கனம் இருந்தால் இப்படி ஃப்ரீயாக ச்வாஸிக்க முடிவதில்லை. இதற்காகத்தான் உடம்பை நெற்றுப் போல் ஆக்கிக் கொண்டு அதனால் ச்வாஸத்தை ஃப்ரீயாகவும் மனஸை லைட்டாகவும் பண்ணிக் கொண்டு நன்றாக ஈச்வர தியானத்தில் ஈடுபடும் பொருட்டு, எப்போதுமே ஆஹாரத்தை வைத்துக் கொள்ள வேண்டுமென்றும், பக்ஷத்துக்கு ஒருநாள் சுத்தோபவாஸம் அநுஷ்டிக்க வேண்டுமென்றும் சாஸ்திரம் விதிக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

தோன்றியது. கற்சிலை போல் ஸ்தம்பித்து நின்றவளைப் பார்த்து, புத்த பிக்ஷு மறுபடியும் "ரஞ்சனி! இது என்ன மௌனம்? எங்கே போய் வேட்டையாடிக் கொண்டு வருகிறாய்?" என்று கேட்டார்.

காபாலிகையின் திகைப்பு ஒருவாறு நீங்கியதாகத் தோன்றியது.

"அடிகளே! நிஜமாக நீங்கள்தானா?" என்று கேட்டாள். அவளுடைய கடினமான குரலில் வியப்பும் சந்தேகமும் தொனித்தன.

"இது என்ன கேள்வி? நான்தானா என் பதில் உனக்கு என்ன சந்தேகம் வந்தது? என்னைத் தவிர இந்த நள்ளிரவில் உன்னை யார் தேடி வருவார்கள்? உன் குகையில் உன்னைத் தேடிக் காணாமல் எங்கே போயிருக்கிறாய் என்று பார்க்கக் கிளம்பினேன்! அது என்ன? யார் உன் தோளில்? எந்தப் பாவியின் பிரேதத்தைச் சுமந்து வருகிறாய்? இப்போதெல்லாம் உனக்கு நல்ல வேட்டை போலிருக்கிறது!"

இவ்விதம் பிக்ஷு சொல்லிக் கொண்டு வந்தபோது காபாலிகை தான் இத்தனை நேரமும் தோளில் சுமந்து கொண்டிருந்த உடலைத் தொப்பென்று கீழே போட்டாள்.

"நல்ல வேடிக்கை!" என்று சொல்லி விட்டுக் கோரமாகச் சிரித்தாள்.

"என்ன வேடிக்கை? அந்தச் சவத்தை எங்கே கண்டு எடுத்தாய்?" என்று பிக்ஷு கேட்டார்.

"அடிகளே! தங்களை நினைத்து இரண்டு காத தூரம் கண்ணீர் விட்டு அழுது கொண்டே நடந்து வந்தேன். அவ்வளவும் வீணாய்ப் போயிற்று!" என்றாள் காபாலிகை.

"கண்ணீர் விட்டாயா? என்னை நினைத்து ஏன் கண்ணீர் விட வேண்டும்? இது என்ன வேடிக்கை!" என்றார் பிக்ஷு.

"பெரிய வேடிக்கைதான். அந்த வேடிக்கையை ஆரம்பத்திலிருந்து சொல்லுகிறேன், கேளுங்கள்!" என்று காபாலிகை ஆரம்பித்தாள்.

"யுத்த வேடிக்கை பார்ப்பதற்காகச் சென்றிருந்தேன். போர்க் களத்துக்குக் கொஞ்ச தூரத்திலிருந்த ஒரு குன்றின் உச்சியிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பப்பா! என்ன யுத்தம்? என்ன சாவு! எத்தனை நரபலி? காபாலிகர் இங்கே மாதம் ஒரு தடவை வந்து ஒரு நரபலி கொடுக்கிறார்களே! இது என்ன பிரமாதம்? அங்கே லட்சோபலட்சம் மனிதர்களையும் ஆயிரம் பதினாயிரம் யானைகளையும் குதிரைகளையும் பலி கொடுத்தார்கள். மூன்று நாள் இரவும் பகலும் பலி நடந்தது. கடைசியில் ஒரு கட்சியார் ஓடவும் இன்னொரு கட்சியார் துரத்தவும் ஆரம்பித்தார்கள். யாரை யார்

துரத்துகிறார்கள் என்றுகூட நான் கவனிக்கவில்லை. எங்கே என்னைப் பிடித்துக் கொள்வார்களோ என்று பயந்து ஓட்டம் பிடித்தேன். இன்று பகலெல்லாம் காட்டில் ஒளிந்து ஒளிந்து வந்தேன். சாயங்காலம் ஆன போது பின்னால் ஒரு குதிரை ஓடி வரும் சப்தம் கேட்டது. என்னைப் பிடிக்கத்தான் யாரோ வருகிறார்கள் என்று மேலும் வேகமாய் ஓடினேன். கொஞ்ச நேரம் குதிரையும் தொடர்ந்து ஓடி வந்தது. நன்றாக இருட்டியதும் யார்தான் என்னைப் பிடிக்க வருகிறார்கள் என்று பார்ப்பதற்காக ஒரு மரத்தின் பின்னால் மறைந்து நின்றேன். என்னைத் துரத்தி வந்த குதிரை திடீரென்று கீழே விழுந்தது. அதன் மேலிருந்த மனிதனும் அப்படியே கிடந்தான். எழுந்திருக்கவில்லை. அருகிலே சென்று பார்த்தபோது குதிரை மரணாவஸ்தையில் இருந்தது. அதன் மேலிருந்த மனிதன் கிடந்த மாதிரியிலிருந்து அவன் இறந்து போய் வெகு நேரமாகியிருக்க வேண்டும் என்று தோன்றியது. அவன் கால்கள் குதிரையின் கடிவாளத்தில் மாட்டிக் கொண்டிருந்தபடியால், கீழே விழாமல் தொங்கிக் கொண்டே வந்திருக்க வேண்டும் என்று தெரிந்தது. குனிந்து அவன் முகத்தைப் பார்த்தேன். தங்களுடைய முகம் மாதிரி இருந்தது. நான் பைத்தியக்காரி தானே? தாங்கள்தான் என்று நினைத்துத் தோளில் போட்டுக் கொண்டு அழுது கொண்டே வந்தேன்...!"

அப்போது புத்த பிக்ஷுவுக்குத் திடீரென்று ஏதோ ஓர் எண்ணம் தோன்றி இருக்க வேண்டும். சட்டென்று கீழே குனிந்து தரையில் கிடந்த உடலின் முகத்தை நிலா வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தார்.

"தம்பி! புலிகேசி!" என்று பிக்ஷு வீறிட்டு அலறியது அந்த விசாலமான பாறைப் பிரதேசம் முழுவதிலும் எதிரொலி செய்தது.

"ரஞ்சனி! நீ போய் விடு! சற்று நேரம் என்னைத் தனியே விட்டு விட்டுப் போ! இங்கு நில்லாதே!" என்று பிக்ஷு விம்மலுடன் சொன்னதைக் கேட்டுக் காபாலிகை பயந்து போய், அங்கிருந்து விலகிச் சென்று பாறையின் மறைவில் நின்றாள்.

பிக்ஷு கீழே உட்கார்ந்து புலிகேசியின் உடலைத் தமது மடியின் மீது போட்டுக் கொண்டார்.

"தம்பி! உனக்கு இந்தக் கதியா? இப்படியா நீ மரணமடைந்தாய்? இந்தப் பாவியினால் அல்லவா நீ இந்தக் கதிக்கு உள்ளாக நேர்ந்தது?" என்று சொல்லி விட்டுப் பிக்ஷு தமது மார்பிலும் தலையிலும் மாற்றி மாற்றி அடித்துக் கொண்டார்.

"ஐயோ! தம்பி! உனக்கு நான் துரோகம் செய்து விட்டதாக எண்ணிக் கொண்டேயல்லவா நீ இறந்து போனாய்? என் உயிருக்கு உயிரான சகோதரனுக்கு, தாயின் கர்ப்பத்திலே என்னோடு பத்து மாதம் கூட இருந்து பிறந்தவனுக்கு, - நான் துரோகம் செய்வேனா? மாமல்லனைப் பயங்கரமாகப் பழி வாங்குவதற்காகவல்லவா நான் சூழ்ச்சி செய்தேன்? அதை உன்னிடம் சொல்லுவதற்கு முடியாமல் இப்படி நடந்து விட்டதே...!"

மறுபடியும் பிக்ஷு தமது மார்பில் ஓங்கி அடித்துக் கொண்டு சொன்னார். "பாழும் பிக்ஷுவே! உன் கோபத்தில் இடி விழ! உன் காதல் நாசமாய்ப் போக! உன் சிவகாமி...! ஆ.! சிவகாமி என்ன செய்வாள்...? தம்பி! உனக்கு நான் துரோகம் செய்யவில்லை. நம் தேசத்துக்கு நான் துரோகம் செய்துவிடவில்லை. அன்றைக்கு அஜந்தாவில் நீயும் நானும் கொஞ்சம் பொறுமையாக மட்டும் இருந்திருந்தோமானால் இம்மாதிரி விபரீதம் நேர்ந்திராதே! இந்த யுத்தம் நடக்கவே நான் விட்டிருக்க மாட்டேனே! பல்லவ நாட்டார் அத்தனை பேரையும் பட்டினியால் சாகப் பண்ணியிருப்பேனே! மாமல்லனையும் உயிரோடு பலி கொடுத்திருப்பேனே! ஐயோ! இப்படியாகி விட்டதே..!"

பிக்ஷு புலிகேசியின் உடலை மடியிலிருந்து மெதுவாக எடுத்துக் கீழே வைத்தார். எழுந்து நின்று இரு கைகளையும் வானத்தை நோக்கித் தூக்கிக் கொண்டு, பாறை மறைவிலிருந்த காபாலிகைக்குக்கூட ரோமம் சிலிர்க்கும்படியான அலறுகின்ற குரலில் உரக்கக் கூறினார்: "தம்பி புலிகேசி! உன் மரணத்துக்குப் பழி வாங்குவேன்! புத்த பகவானின் பத்ம பாதங்களின் பேரில் சத்தியம் செய்கிறேன். கபாலம் ஏந்தும் சம்ஹார ருத்ரன் தலை மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். இரத்த பலி கேட்கும் சக்தி பத்ரகாளியின் பேரில் சத்தியம் வைத்துச் சபதம் செய்கிறேன். உன்னைக் கொன்றவர்களைப் பழி வாங்குவேன்!"

(தொடரும்)



* லேனா, ரஜினி, புதுமணத் தம்பதி

# ரஜினியின் கல்யாணப் பரிசு

"இந்த ஃபோட்டோவில் என்னைப் பார்க்கிறப்போ எனக்கு ரொம்ப ஏக்கமா இருக்கு. கருகருன்னு எவ்வளோ தலைமுடி!" என்று தமது தலைமுடியைத் தடவியபடி சொன்னார் சூப்பர் ஸ்டார் ரஜினி. இடம் : லேனா தமிழ்வாணனின் வீடு.

அண்மையில் நடந்த லேனாவின் மகன் அரசுவின் திருமண வரவேற்புக்கு இயலாமல் போனதால், மணமக்களை வாழ்த்த லேனாவின் வீட்டுக்கே வந்தார் ரஜினி. அப்போது, பழைய கறுப்பு வெள்ளை புகைப்பட ஆல்பம் ஒன்றை லேனா காட்ட, அதிலிருந்த புகைப்படத்தில் தம்மைப் பார்த்துவிட்டுத்தான் ஏக்கப் பெருமூச்சுவிட்டார் ரஜினி.

மணமகன் அரசு, ரஜினிக்கு சிங்கப்பூர் பிரதமரின் சுயசரிதை புத்தகத்தை வழங்கி, நீங்கள் ஒரு பேட்டியில் உங்களைக் கவர்ந்த அரசியல் தலைவர் யார்?' என்ற கேள்விக்கு சிங்கப்பூரின் பிரதமராக இருந்த லீவான் யூ என்று பதில் சொல்லி இருந்தீர்கள். அதனால் இந்தப் புத்தகத்தை வாங்கினேன்" என்று சொன்னார்.

'லீயைப் பற்றி நான் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். அவரது வாழ்க்கை வரலாறைப் படித்ததில்லை. ரொம்ப தேங்ஸ்" என்றார் ரஜினி.

"கேளம்பாக்கம் பண்ணை வீட்டில் தான் இப்போது இருக்கிறீர்களா?" என்று லேனா கேட்க, "ஆமாம்! நான் இப்போ இருபத்து நாலு மணி நேரமும் ஃப்ரீ! போயஸ் கார்டன் வீட்டில், அடைந்து கிடக்க முடியவில்லை. கேளம்பாக்கத்தில் பதினேழு ஏக்கர் நிலம். நாலு ஏக்கரில் வீடு. இயற்கைச் சூழல்... அங்கே இருக்க எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு" என்றார்.

"உங்க மனைவியையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கலாமே!" என்று லேனாவின் சகோதரி கேட்க, "அவங்க ஆஸ்திரேலியா போயிருக்காங்க. வர பத்து நாளாகும். இரண்டு மகள்களும் அம்மா கூட போயிருக்காங்க. பொண்ணுங்க இரண்டு பேரும் ஆஸ்திரேலியாவிலேயே தங்கி மேலே படிக்கப் போறாங்க" என்று விளக்கமளித்தார் ரஜினி.

மணமக்கள் தவிர குடும்பத்து உறவினர்கள், மற்றவர்கள் என சுமார் நாற்பது பேர் கூடியிருந்தனர். அத்தனை பேருடனும் நின்று பொறுமையாக, ஃபோட்டோ எடுத்துக் கொண்டார்.

'நீங்க ரிசப்ஷனுக்கு வந்திருந்தாக்கூட, ரொம்பப் பரபரப்பா இருந்திருக்கும். இப்போ வந்ததுல, நிதானமா பேச முடிஞ்சது" என்று சந்தோஷப்பட்டார் லேனா.

மணமக்களுக்கு ரஜினி வழங்கிய பரிசு என்ன? ஆர்வத்துடன் பரிசுப் பொட்டலத்தைப் பிரித்தபோது உள்ளே இருந்தது, ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் படம்!

- எஸ். சந்திரமௌலி

படம் : வெங்கடேஷ்



* மலரும் நினைவுகளில்...

## ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்

நவராத்திரி என்றால் ஒன்பது இரவுகள் என்றும், புதிய இரவு என்றும் பொருள்படும். தாயின் கருப்பையிலும், பூமிக்கு அடியிலும் இருளில்தான் படைப்பு (ஆக்கல்) நிகழ்கிறது. கருப்பையில் இருக்கும் ஒன்பது மாதங்களில் ஆத்மா, மனித உருவாக வடிவெடுக்கிறது. அது நீண்ட இந்த ஒன்பது இரவுகளைக் குறிக்கிறது.

இரவு, நாம் பகலில் இழந்த சக்தியைத் திரும்பப் பெறச் செய்கிறது. ஓய்வைத் தருகிறது. நாம் நாளெல்லாம் உழைத்துவிட்டு வீடு சேர்ந்ததும் களிப்போடு இருக்கிறோம். பிரார்த்தனை செய்கிறோம். புத்துணர்வு பெறுகிறோம். இரவில் முழு உலகமும் உறங்குகிறது. எல்லா ஜீவராசிகளும் உறங்குகின்றன. ஆசிரமத்துக் காவல்காரனும்கூட!

ஆழ்ந்த ஆன்ம உணர்வுக்குப் புத்துயிர் அளிக்கவும் நவராத்திரியின் ஒன்பது இரவுகளும் கொண்டாடப்படுகின்றன.

அப்படிக் கொண்டாடும்போது, எதை வலியுறுத்துகிறோம் தெரியுமா?
உன்னுடைய உடலையும், மனத்தையும் தூய்மையாக்கு
உன்னுடைய உடலை, நீரினால் தூய்மையாக்கு;
உன்னுடைய மனத்தை, ஞானம் பிராணாயாமம்,
சுதர்ஷன் க்ரியா, தியானம் இவற்றால் தூய்மையாக்கு.
என்று நினைவூட்டி வலியுறுத்துகிறோம்.

# புத்துணர்வு தரும் புதிய இரவுகள்!

இந்த நவராத்திரி மிகவும் உத்தமமானது; ஒன்பது இரவுகளும் மிக உன்னத சக்தியுடையவை. தேவியின் அறுபத்து நான்கு சக்திகளும் சகல ஜீவராசிகளையும் ஆளுகின்றன. இந்த அறுபத்து நான்கு சக்திகளும், இவ்வுலக வாழ்விற்கும், ஆன்மீக வாழ்விற்கும் உள்ள ஆதாயங்களுக்கெல்லாம் பொறுப்பானவை. தேவியின் இந்த திவ்ய சக்திகள், விழிப்புணர்வோடு உள்ள ஒருவரின் மெய்யறிவிலேயே அடங்கியிருக்கின்றன. நம்முள் உள்ள இந்த திவ்ய சக்திகளைத் தூண்டவும், மேலும் மேலும் நம்





## அன்பின் ஊற்று-16

சிறு குழந்தையாக இருக்கும்போதே ரவி சங்கர் பூஜைகளில் பங்கு கொண்டு மகிழ்ந்தார். ஒரு பண்டிதருக்குத் தேவையான சகல வேத சாத்திரங்களையும், சம்ஸ்கிருதத்தையும் கற்றுக் கொண்டார். ரிக் வேதத்தை அவர் கற்றபோது, அவருக்கு ஒன்பது வயதேதான் ஆகியிருந்தது!

ஒரு நாள் தகப்பனார் பூஜை செய்து கொண்டிருந்தபோது, அவரிடம் முழு விவரங்களையும் கேட்டு அறிந்தார். அவர் மீனாட்சி அம்மனின் படத்தை அவருக்கு அளித்தபோது, அதைத் தமது சொந்தக் கடவுள் போல பாவித்து, தமது முழு நம்பிக்கையையும் அந்தக் கடவுள் மீது செலுத்தினார்.

தம் பாட்டி பூஜை செய்வதைப் பார்த்துக் கொண்டிருந்த போதுதான் குருஜிக்கு பூஜைகளின் முக்கியத்துவம் புரிபடலாயிற்று. "அப்போதெல்லாம் வீட்டில் மண் அடுப்புத்தான். பாட்டி அதைத் துடைத்து, கோலமிட்டு வைப்பாள் - முதல் நாள் இரவே. பிறகு மறுநாள் அடுப்பு மூட்டியதும் அந்த அக்னியைத் தொழுவாள். பின்னர் தண்ணீரை ஒரு குடத்தில் வைத்து அதையும் வணங்குவாள். கிணற்றிலிருந்து முதல் முதலாகத் தண்ணீரை இறைக்குமுன்னாலும், கிணற்றைத் தொழுவாள். எனவே, எல்லாப் பொருள்களுமே வணங்குவதற்கு உரியவை ஆகிப் போயின என்பார் குருஜி.

குழந்தையாக இருக்கையில் அடிக்கடி காணாமல் போய்விடுவார் குருஜி. கோயிலோ, மசூதியோ, சர்ச்சோ ஏதாவது ஒன்றில் நுழைந்து அங்கு நடக்கும் சடங்குகளைக் கூர்ந்து கவனிப்பார். பிறகு வீட்டுக்கு வந்து, தமது அருமைச் சகோதரி பானுவிடம் தாம் பார்த்ததையும், அறிந்ததையும் சொல்லுவார்.

"பூஜை அன்பிலிருந்து பிறந்தது. பூஜை, முழுமையிலிருந்து உருவாவது. இயற்கை என்னவெல்லாம் உங்களுக்குத் தந்திருக்கிறதோ அவற்றுக்கு நன்றி தெரிவிப்பதன் அடையாளம்தான் பூஜை. தானியத்தைத் தந்தால் தானியத்தைக் காணிக்கையாக்குங்கள். மலர்களைத் தந்தால், மலர்களைச் சமர்ப்பியுங்கள். பழங்களைத் தந்தால், பழங்களைப் படையுங்கள். சூரியனாகவும் சந்திரனாகவும் இருந்து வெளிச்சத்தைத் தரும்போது, கர்ப்பூரமோ தீப ஆராதனையோ செய்து, சிறிதேனும் ஒளிபரப்பி நன்றி செலுத்துங்கள்.

(நிறைந்தது)

தொகுப்பு : சாருகேசி

முசிறி தாலுகாவில் இப்போதும் ஒரு கட்டுப் பெட்டியான இராமம்தான் பெரமங்கலம். ஐந்நூறு வீடுகள் கொண்ட ஊரில் விவசாயமே முக்கியத் தொழில்.

கிழக் தெருவின் ஓட்டுவில்லை வீட்டுத் திண்ணையிலிருந்து குப்பாயிக் கிழவியின் உச்சமடைந்த குரல் வெற்றிலை எச்சிலுடன் வீதியில் வந்து விழுகின்றது.

# பலே பெரமங்கலத்துப் பெண்கள்!



* சவாரிக்குத் தயார்

"எலே... ராசப் பயலே... நம்ம ஊரு சின்ன வயசு சிறுக்கிக எல்லாம் எங்கேடா சீவி சிங்காரிச்சுப் போய்ட்டு வர்றாளுக?" பாட்டியின் சொல்லுக்குப் பதில் வந்தே தீர வேண்டும்.

"அதுவா ஆயா... என்னமோ... மகளிர் சுய உதவிக் குழுவுன்னு சொல்றாங்க. மாசத்துல ஒரு வாட்டி இரண்டு வாட்டி அதுக்குதான் போய்ட்டு வர்றாங்க!"

கிழவி சலித்துக் கொண்டாள். "பொழப் பத்தவள்க கெடந்து அலையுறாளுக!" திருமணமாகாத பெண்களின் பெற்றோர்களும், சகோதரர்களும் "ஏனிந்த புது வேலை?" என்று ஏகடியம் பேசினர்.

"இந்தப் பொம்பளைங்க என்னத்த சாதிக்கப் போறாங்க?" என்று கேலிபேசிய ஊர் ஜனங்களின் மூக்கில் விரல் வைத்துப் பார்க்குமளவுக்கு செய்து விட்டனர் பெருமங்கலம் கிராமத்து புதுக்கருப்பு மகளிர் சுய உதவிக் குழுவினர்.

மூன்று வருடங்களுக்கு முன்னால் காடுகரை வேலைகளுக்குச் சென்று வந்த தினக்கூலிப் பெண்கள் அவர்கள். விவசாய வேலைகள் சரிவர கிடைக்காது போகவே, அவர்களில் ஒரு சிலர் ஒன்றிணைந்து புதுக் கருப்பு மகளிர் சுய உதவிக் குழு ஒன்றை உருவாக்கினர். பதின்மூன்று பெண்கள் அதில் உறுப்பினர் ஆனார்கள். ஒன்பதாம் வகுப்பு படித்த மு. சுமதி, குழுவின் தலைவி. பத்தாம் வகுப்புப் படித்த சி. உஷா குழுவின் பொருளாளர்.

மாதச் சந்தா இரண்டு ரூபாய். மாத சேமிப்பு இருபத்தைந்து ரூபாய் என துவங்கப்பட்டது மகளிர் சுய உதவிக் குழு. ஒரு வருடத்துக்குப் பின்னர் மாதச் சந்தா ஐந்து ரூபாயாக உயர்ந்தது. விவசாய வேலை வாய்ப்புகள் கை நழுவிப் போனபோது, அவர்களுக்கு கறவை மாடுகள் கை கொடுக்க வந்தன. பத்து பெண்கள் ஆளுக்கு ஒரு கறவை மாடு சகிதமாய் புதுக்கணக்கைத் துவங்கினர். ஒரு மாடு எட்டாயிரம் ரூபாய். பத்து மாதத்தில் அந்தக் கடனை அடைத்துவிட்டார்கள். இப்போது அவர்களுக்கு கறவை மாடுகளும் கன்றுகளும் சொந்தமாகிவிட்டன!

கூரை வீட்டில் வசித்து வந்த லட்சுமி இருபத்தைந்தாயிரம் கடனுதவி பெற்று மெத்தை வீடு கட்டியுள்ளார். பரமேஸ்வரி இருபதாயிரம் கடனுதவி பெற்று ஓட்டு வீடு கட்டிக் கொண்டார். தையல் மிஷின் ஒருவருக்கு. ஜெம் கட்டிங் இயந்திரம் ஒருவருக்கு.




சுழல் நிதி மூலமாக கடனுதவி பெற்று, கவரிங் நகை செட் பெட்டி ஒன்று வாங்கியுள்ளனர். ஒரு நாள் வாடகை முன்னூறு ரூபாய் என சுற்றுவட்டாரக் கிராமங்களுக்கு அந்த கவரிங் நகை செட் பெட்டி சுற்றுலா சென்று வருகிறது.

வீட்டில் திட்டிக் கொண்டிருந்த இல்லத்தரசர்கள் பெட்டிப் பாம்பாய் அடங்கிப் போயினர். பெண்களின் வளர்ச்சி கண்டு ஒட்டு மொத்த கிராமமே மலைத்துப் போனது.

சுய உதவிக் குழு அங்கத்தினர்களின் குடும்பத்துத் தேவைகள் பூர்த்தி ஆகி தினசரி வருவாய்க்கும் வழி பிறந்து விட்டது. குழுவின் உயர்வுக்கு மேலும் என்ன செய்யலாமென யோசித்தனர். அப்பொழுதுதான் உதித்தது மினி சரக்குவேன் வாங்கும் எண்ணம்.

கிராமப் புறங்களிலிருந்து சிறிய அளவிலான சரக்குகளை ஏற்றிச் செல்வதற்கு, அருகிருக்கும் பெரிய ஊர்களிலிருந்து சரக்கு வேன்களை வரவழைக்க வேண்டியிருந்தது. அதற்குப் பதிலாக நாமே மினி சரக்கு வேன் ஒன்றை ஓட்டலாமே என்று யோசித்தார்கள். இதற்கு திருச்சி மாவட்ட திட்ட அலுவலர் மனோகர சிங், உதவி திட்ட அலுவலர் ரஹீம் ஆகியோர் உறுதுணையாய் இருந்துள்ளனர்.

மினி சரக்குவேன் வாங்க முடிவானது. சரி, யார் ஓட்டுவது? அதுவும் மகளிராக இருந்தால்தானே சிறப்பு? மு. சுமதியும், சி. உஷாவும் முறைப்படி பயிற்சி பெற்று லைட் மோட்டார் லைசென்ஸ் பெற்றனர். வங்கிக் கடனுக்கு மாவட்ட முகமை மூலமாக விண்ணப்பம் செய்தனர். இரண்டு லட்ச ரூபாய் மதிப்பிலான மினி சரக்கு வேன் ஒன்று, பெரமங்கலம் கிராமத்து மண்ணில் வந்து நின்றது.

இப்போது அந்த இரண்டு பெண் டிரைவர்களும் மாற்றி மாற்றி சரக்குகள் ஏற்றிக் கொண்டு அருகிலிருக்கும் நகரங்கள் நோக்கிப் பறந்து கொண்டிருக்கின்றனர்.

படங்கள் :
ஃப்ளாஷ் பாய்ண்ட் ரகுபதி

• 'அடுத்த சாதனை என்ன?' - ஆலோசனை



கரூரில் புறப்பட்டு திருச்சி நோக்கி வந்து கொண்டிருக்கிறது அந்தக் காலை நேரப் பாசஞ்சர் ரயில். வழியில் குளித்தலை நிலையத்தை அடைந்ததும் பெருமூச்சுடன் நிற்கிறது.

திருச்சி மாநகரக் கல்லூரிகளில் பயிலும் சுமார் முந்நூறு சுற்று வட்டார மாணவ, மாணவிகள் இளமைத் துள்ளலோடு பெட்டிகளில் தாவி ஏறுகிறார்கள். அடர்ந்த தாடியுடன் ஏதோ ஒரு தீவிர நோக்கத்தையும் முகத்தில் தேக்கி வைத்திருக்கும் நடுத்தர வயது இளைஞர் ஒருவர் இவர்களையெல்லாம் கூர்ந்து கவனித்துக் கொண்டே ரயிலில் ஏறுகிறார். அவரோடு கூடவே நாலைந்து பேர் ஏறுகிறார்கள். தாடி இளைஞரும் அவரது சகாக்களும் மாணவர்களை நெருங்குகிறார்கள்.

ரயில் புறப்படுகிறது. மரங்கள் கட்டடங்கள் பின்னோக்கி நகர்கின்றன. மாணவர்கள் அரட்டைக் கச்சேரியை ஆரம்பிக்கும்போது அந்த தாடி இளைஞரின் கணீர்க் குரல் மாணவர்களை ஈர்க்கிறது.

வேலை வாய்ப்புகளைப் பற்றிப் பேசத் தொடங்குகிறார். அரசுத் துறைகளில் என்னென்ன பதவிகளுக்கு, என்னென்ன போட்டித் தேர்வுகள், எப்படிப்பயிற்சி பெறுவது, இந்திய ஆட்சிப் பணிகளுக்கான தேர்வுகளுக்கு எப்படித் தயாராவது, தனியார் துறை வேலை வாய்ப்புகளை எப்படி இனம் காண்பது, வேலை வாய்ப்பு தரும் மேற்படிப்பை எப்படித் தேர்வு செய்வது, தன்னம்பிக்கை, சுயதொழில் என்று பேசிக் கொண்டே போகிறார். இடையிடையே மாணவர்கள் கேட்கும் கேள்விகளுக்குத் துல்லியமான பதிலை அள்ளித் தருகிறார். அந்த தாடிக்கார

# கலக்குது பார் இவர் ஸ்டைலே!




• மாணவர்களுடன் ரயில் பெட்டியில் சுரேஷ்குமார்

* பிளாட்ஃபாரம் ஃபீட்பேக்!



* முதன்முதலாய் குளித்தலையில்...

இளைஞரின் பேச்சு, பயணம் செய்து கொண்டிருக்கும் மாணவர்கள் அனைவரையும் முன்னோக்கி இழுத்துச் செல்கிறது. யார் இவர்?

திருச்சி மாவட்ட வேலை வாய்ப்பு அலுவலகத்தின் உதவி இயக்குனரான பி. சுரேஷ்குமார்.

**சி**னிமாவில், ரயிலை காதல் வாகனமாகவே பார்த்துப் பழக்கப்பட்ட இளைஞர்களுக்கு இது முற்றிலும் புது அனுபவம்.

மாணவ, மாணவிகளின் ரயில் பயண நேரங்களை, அவர்களின் எதிர்கால வேலை வாய்ப்பு விழிப்புணர்ச்சி மற்றும் பயிற்சிக் களமாக மாற்றிக் காட்டியிருக்கும் சுரேஷ்குமார், தமது மாவட்ட வேலை வாய்ப்பு அலுவலகத்தின் வழக்கமான சூழ்நிலையையும்கூட தலைகீழாக மாற்றிவிட்டிருக்கிறார். கல்வித் தகுதியைப் பதிவு செய்யவும், பதிவைப் புதுப்பிக்கவும் மட்டுமே வேலை வாய்ப்பு அலுவலகம் என்ற நிலையை மாற்றி, தன்னார்வ பயிற்சி வட்டத்தை நூலகத்தோடு உருவாக்கி இருக்கிறார். இங்கே வரும் மாணவ, மாணவிகள் வட்டமாய் அமர்ந்து விவாதிக்கிறார்கள். குழப்பம் நீங்கிச் செல்கிறார்கள்.

"கல்லூரிக்கு வரும்போதும் வீடு திரும்பும்போதும் பயண நேரம் தவிர, நிலையத்தில் காத்திருக்கும் நேரமும் எங்களுக்கு வீணாகி வந்தது. இப்போது ரயில் பெட்டிகள் எல்லாம் செமினார் ஹால் போல ஆகிவிட்டன" என்று பாராட்டுகிறார் பயனடைந்த மாணவர் ரகு.



## காட்சி : 65

ஒரு மாலை நேரம். இன்னும் விளக்கு ஏற்றப்படவில்லை. இந்தத் தொலைக்காட்சித் தொடரில் நடித்தவர்கள், பாத்திரங்களாக இயங்கியவர்கள் எல்லோரும் வருகிறார்கள்.

இடம்: தொடரின் ஆசிரியர் வீடு.

ஆசிரியர் எதையோ எழுதிக் கொண்டிருக்கிறார். வீட்டு வாசலில் அழைப்பு மணி ஒலிக்கிறது. ஆசிரியர் எழுந்து போய்க் கதவைத் திறக்கிறார். மிஸஸ். அம்சா எதிரில் நிற்கிறார்.

**ஆசிரியர்:** வாங்க அம்சாம்மா. உள்ளே வாங்களேன். *(அம்சா சுவாதீனமாக உள்ளே போய், ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்கிறாள். அவளுக்கு முன் தன் நாற்காலியில் அமர்ந்து கொள்கிறார் ஆசிரியர்.)*

**அம்சா:** இந்தக் கண்ணன், என்ன இப்படி ஏமாத்திட்டானே, நீங்க அவனுக்குப் புத்தி சொல்லக் கூடாதா, அவனை இப்படி விட்டிருக்கலாமோ, நீங்க?

**ஆசிரியர்:** அவன் வேலையை ராஜினாமா பண்ணினதைச் சொல்றீங்களா?

**அம்சா:** வேற ஏதேனும் அக்கப்போர் இருக்கா?

**ஆசிரியர்:** இல்லை. அவனுக்கு வேலை செய்யப் பிடிக்கலை. வேறு ஏதோ செய்யணும்னு ஆசைப்படறான். அவன் இஷ்டத்துக்கு அவனை விடறதுதானே சரி?

**அம்சா:** இந்த வேலைக்கு என்னவாம்?

**ஆசிரியர்:** அம்சாம்மா. வேலைக்கும் சம்பளத்துக்கும் மட்டும் சம்பந்தம் இருக்கிறமாதிரி நம் மனசை அமைச்சுக்கிட்டு இருக்கோம். சிலருக்கு, வேலைக்கும் மனசுக்கும் சம்பந்தம் இருக்கணும்னு தோணும். கண்ணன், இந்த ரகம்.

**அம்சா:** மாசம் பிறந்தா, சொளையா, முள்ளங்கிப் பத்தை மாதிரிச் சம்பளம் வாங்கிறதை விட்டுட்டு... இதனால, என்ன கிடைக்கும்?

**ஆசிரியர்:** ஆத்ம லாபம், சுதந்தரம், சந்தோஷம்.

**அம்சா:** சரி, அதை விடுங்க. இந்தக் கீதாவுக்கு என்ன குறைச்சல்? அவளைப் பண்ணிக்கலாமோல்லையோ? என்னமோ, சினேகமாம். அது காதலாகக் கூடாதாம். *(உள்ளே வரலாமா என்றபடி கண்ணனும் கீதாவும் பிரவேசிக்கிறார்கள்.)*

**ஆசிரியர்:** உங்களைப் பத்தி தாம்பா...

**கண்ணன்:** தெரியும் சார். அம்சா மாமிக்கு, உலகத்துல இருக்கிறவங்க எல்லாம் குடியும் குடித்தனமுமா, பாதுகாப்பான வேலை செஞ்சுக்கிட்டுச் சந்தோஷமா இருக்கணும். அப்படி ஒரு ஆத்மா அவங்க. ஆனா மனுஷங்க, சோப்புக் கட்டி மாதிரி, ஃபேக்டரியில செய்யப்படலையே... ஒவ்வொருத்தருக்கும் ஒரு மூளை, ஒரு ஆத்மா, ஒரு மனசு. தனித்தனியா இருக்கே. என்ன பண்ணட்டும்?

*(டீக்கடைப் பையன், எல்லோருக்கும் டீ கொண்டு வந்து வைக்கிறான்.)*

**அம்சா:** நாங்க யாரும் டீ சொல்லலையே...

**பையன்:** அவசியம் இல்லீங்க. யார் வந்தாலும், உடனே டீ கொண்டு வந்துடணும்னு சார் உத்தரவு.

*(பையன், ஆசிரியருக்கு முன்னால் வந்து டீயைக் கொடுத்துவிட்டு)*

**பையன்:** என்ன சார்... ஒரு சஸ்பென்ஸ், திகில், பயம், இல்லையே சார், உங்க கதையில...

**ஆசிரியர்:** என்ன பண்றது, ராஜா. எனக்கே சஸ்பென்ஸ், திகில், பயம் பிடிக்காதே.

**அம்சா:** உங்களுக்குப் பிடிக்கலைன்னா, என்ன. எங்களுக்குத் தேவைப்படுதே... எழுதினா, சும்மா, எழுத்தில எழுதினா, என்ன சார்.

**ஆசிரியர்:** அது பாவம், அம்சாம்மா. எனக்கு நிகரா உங்களை நினைக்கிறேன். உங்களுக்குக் கொடுக்கிற டீயைத்தான் நானும் குடிக்கணும். என் ரசனையைத் தான் நான் உங்களுக்கும் தரணும். தவிரவும், வாழ்க்கையில, எத்தனை பேரு திரில்லுல, பயத்துல வாழ்ந்துகிட்டு இருக்கோம்? இதோ, இந்த 'டேபிள் - வெயிட்' மாதிரி தெளிவா, இருக்கு வாழ்க்கை. இதுல போயி, மகனுக்கு, மருமகளுக்கு விஷம் வைக்கிறது, குழந்தைகளைத் துன்புறுத்தறது, மாமியார்களைக் கொடுமைக்காரியா காட்டறது, பேய், பில்லி, சூனியம்னு காதுல பூ சுத்தறது. இதெல்லாம் எனக்குப் பிடிக்கிறது இல்லை. உங்களுக்கு முன்னால, ஜன்னல் திரையை விலக்கிறேன். எதிர் வீடு, பக்கத்து வீடு, நம்ம வீடு தெரியும். அதுதான் வாழ்க்கை நாடகம். இதுக்கு மேல எதுவும் இல்லை.

**பையன்:** என்னா கண்ணா சார், இனி மேலயாவது என்னை ஒரு போட்டோ எடுப்பீங்க இல்லையா?

**கண்ணன்:** எடுக்கிறேன்.

*(டீ கிளாசுடன் போகிறான். தெருவில் ஆட்டோ சப்தம் கேட்கிறது. சேது பிரவேசிக்கிறான்.)*

**சேது:** ஏழு மணிக்குத்தான் வரச் சொன்னீங்க. நான் கொஞ்சம் சீக்கிரமாவே வந்துட்டேன். ஒரு சந்தேகம் சார்... யாரும் கஷ்டப்படற மாதிரியே எழுத மாட்டீங்களா, சார்? *(எல்லோரும் சிரிக்கிறார்கள்)*



"வாஸ்து பார்க்க வேண்டியதுதான். அதுக்காக தலைவர் இப்படியா நடந்துக்கறது?"

"என்ன பண்ணினார்?"

"பையன் சரியாப் படிக்காததுக்கு அந்தப் பள்ளிக்கூடம் வாஸ்துபடி கட்டப்படாததுதான் காரணம்னு சொல்லி பள்ளிக்கூடத்தையே மாத்திக் கட்டச் சொல்லிட்டார்."

- பாளை. பாலு

**ஆசிரியர்:** குறிப்பா கேளுங்க, சேது.

**சேது:** தேவயானையும் லாரன்சும் சந்தோஷமா வாழ்ந்தாங்கன்னு எழுதறீங்க... மதம் வேற. அதோடு மாமியா, வியாதிக்காரி, எவ்வளவோ, விஷயங்கள்ல கஷ்டம் கொடுக்கலாம். குறைந்த பட்சத் துன்பம் கொடுக்கிறமாதிரியாவது எழுதி இருக்கலாமே.

**ஆசிரியர்:** மனம் இணைஞ்சா, மதம் என்ன? இந்துவும் கிறிஸ்துவரும் கல்யாணம் பண்ணிக்கிட்டா, பிரச்னை வந்தே தீர வேணுமா? அப்படி இல்லையே... அப்புறம், மாமியார் மனுஷியா இருக்கவே முடியாதா?

*(சண்முகம் வந்துகொண்டே)*

**சண்முகம்:** என்னை மட்டும் மோசமானவனா பண்ணிட்டீங்களே, சார். நான் என்ன பாவம் பண்ணேன்?

**ஆசிரியர்:** பெரிய பாவம், பண்ணி இருக்கீங்க, சண்முகம். சுசிலா, எவ்வளவு நல்ல மனுஷி. அவளை இவ்வளவு கொடுமை பண்ணலாமோ, நீங்க? உங்களுக்கெல்லாம் ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கவும், வீடு கட்டப் பணம் வாங்கிக் கொடுக்கவும்தான் மனைவியா? மனைவிகிட்டே, பணம் 'டெபாசிட்' பண்ணி வச்சிருக்கீங்களா, என்ன? சோத்துக்கு வழி இல்லாமலா, கட்டிக்கப் புடைவை இல்லேன்னா, தங்க இடம் இல்லேன்னா, உங்களை அந்தப் பொண்ணு சுசிலா கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க, சொல்லுங்க. கல்யாணம்கிற அமைப்பையே அசிங்கப்படுத்தறீங்க. பெண்களைச் சிதைக்கிறீங்க. ஒரு மனைவி இருக்கும்போதே, இன்னொரு மனைவியைத் தேடறீங்க... ஒரு லட்ச ரூபா கொடுத்தா மனைவியையே விற்கிற ஆண்களா இருக்கீங்க... ஆனாலும், உங்களையும் ஒரு கட்டத்துக்குப் பின்னால, 'சின்'லேந்து எடுத்திட்டேன்.

**கீதா:** சுசிலாவைக் காப்பாத்தி இருக்கீங்க.

**ஆசிரியர்:** நான் காப்பாத்தலை கீதா... அவங்க தன்னைக் காப்பாத்திக்கிட்டாங்க. புருஷன் மோசமானவனா இருந்தா சகிச்சுக்கிறது, பெரிய துன்பம். அந்த மாதிரி டைப் இல்லை, சுசிலா. அதோட, இந்தச் சூழ்நிலையில, கணவனை விட்டு வெளியே வர்ற பெண்கள், வாழ்க்கையை எதிர் கொள்றாங்கன்னு சொல்றதுதான்

என் வேலையா எடுத்துக்கிட்டிருக்கேன். அவங்க வாழ்க்கையில ஜெயிச்சாங்கன்னு வெளிப்படையா சொல்லலைன்னாலும், 'பாசிட்டிவான' தொனியிலதான் என்னால சொல்ல முடியும். சுசிலா நல்லா இருக்கட்டுமே, சண்முகம். அதனால உங்களுக்கு என்ன நஷ்டம்?

**அம்சா:** ஆனாலும், என் வீட்டுக்காரருக்கு உங்க மேல கோபம்.

**ஆசிரியர்:** ஏனாம்?

**அம்சா:** கௌரவமா எழுதிக்கிட்டு வந்தார். போயும் போயும் ஒரு அந்த மாதிரிப் பெண்ணை ரொம்ப உசத்தியா, தூக்கி வச்சி எழுதறாரேன்னு அபிப்பிராயம்...

**ஆசிரியர்:** யாரைச் சொல்றார், புரியலையே.

**அம்சா:** ரேணுகாவைச் சொன்னார்.

**ஆசிரியர்:** ரேணுகாவை விமர்சிக்க நான் யார், அம்சம்மா? அது அவங்க வாழ்க்கை. அதோட, எந்தப் பொண்ணு, இது மாதிரி வாழணும்னு வரம் வாங்கி வருது? இது, திணிக்கப்பட்ட வாழ்க்கை இல்லையா? இது மாதிரி ஒரு பொண்ணை இப்படியாக்கின ஆண்கள் எத்தனை பேர்? ரேணுகா, மோசம்னா, இந்த மோசத்தைப் பண்ணின படு மோசமான ஆண்களை அல்லவா முதல்ல நாம் விமர்சிக்கணும்? ஆண்களோட அயோக்கியத்தனத்தாலே அல்லவா, ஒரு பெண் இப்படி உருவாக முடியும்? அதோடு, எதுக்கு ஒருத்தியை அல்லது ஒருத்தனை வெறுக்கணும், சொல்லுங்க? என் கையில, தராசை நான் எப்போதும் எடுக்கிறதில்லை. யாருக்கும் நியாயம் சொல்றது இல்லை. அதோடு, என் வேலையும் அது இல்லை.

**சண்முகம்:** பொண்ணுங்களைப் புருஷனை விட்டு வந்திடுங்கோ, கல்யாணம் பண்ணிக்காதீங்க, அப்படியே பையனும் பெண்ணும் சேர்ந்து ஜதை ஜதையா சுத்துங்கன்னு, ஊரைக் கெடுக்கிறீங்கன்னு எனக்குத் தோணுது.

**ஆசிரியர்:** நான் கெடுத்தா, கெட்டுப் போற அளவுக்கா ஊர் இருக்கு சண்முகம்? எந்தப் பலமும் இல்லாத என்னால கெடுக்கும்படியான துர்பலமா ஊர் இருந்தா, அது கெட்டுப் போகட்டுமே! நான் கெடுக்கலைன்னாலும், அது கெட்டுத்தானே போகும்? கெடத் தயாராக இருக்கிற ஊரை யார்தான் தடுக்க முடியும், சொல்லுங்க! நான் புருஷனை விட்டு வரச் சொல்றது இல்லை. கொதி நிலை தாங்



"ஃபேக்ஸ் வந்துதே.. ஏதுவும் அர்ஜெண்ட் மெஸேஜா?"

"ரெண்டு மணி நேரம் கழிச்சு வேலைக்கு வர்றதா நம்ம முனியம்மாதான் கொடுத்திருக்கா!"

- வசந்தி வள்ளுவன்

காமே வெளியே வர்ற பெண்கள் மேலே தான், என் அக்கறை. அவங்க தனித்து நின்னு ஜெயிக்கணும்கிறதுதான் என் தவிப்பு. கல்லும் புல்லுமான புருஷனோட, கொஞ்சமும் ஈரமும், நேசமும் இல்லாத மனிதனோட, உங்க தங்கை வாழறது, உங்களுக்குச் சுகமா இருக்குமா, சண்முகம்? அப்படிப்பட்ட ஒருத்தருக்கு உங்க மகளைக் கொடுப்பீங்களா...? ஏன் பேச மாட்டேங்கறீங்க?

**சண்முகம்:** கல்யாணத்துக்கு முன்னால, ஒரு பெண்ணும் ஆணும் சுத்தறது, நல்லதா?

**ஆசிரியர்:** நல்லது. குழந்தைகள், குழந்தைகளாத்தான் உலகமெல்லாம் பிறக்குது. நம்ம நாட்டுலதான் ஆண் குழந்தைகள் பெண் குழந்தைகளா, பிரிஞ்சு வளர்க்கப்படுது. குழந்தைப் பருவத்திலேயிருந்து இருவரையும் சேர்த்து பழக வச்சா, எந்தத் தப்பும் நடக்காது. பிரிச்சுப் பிரிச்சு வளர்த்தா, ஒருத்தர் மேலே மத்தவர்க்குக் கவர்ச்சி ஏற்பட்டுடும். அதுதான் சிக்கல். மூடப்பட்ட அறைக்குள்ள என்ன இருக்குன்னு பார்க்கிறது, இயல்புதானே? அதுக்கு இடம் வைக்கலாமா? பிரிச்சுப் பிரிச்சு வளர்க்கிற பையன், பெண்ணைப் பார்த்து, டைம் என்னன்னு கேட்டாலே போதும், அவ கிறுகிறுத்துப் போயிடுவா. அல்லது அவள், அந்தப் பையன்கிட்ட கெமிஸ்டிரி நோட் கேட்டாலே போதும், பையனுக்கு இரவு பூரா தூக்கம் வர்றதில்லை. ஏன்? நம் வளர்ப்புக் கோளாறுதான் காரணம். இயல்பா பழக விட்டா, எந்தத் தப்பும் நடக்காது.

**சண்முகம்:** நடந்தா?

**ஆசிரியர்:** மனித இயற்கை ஜெயிச்சுடுச்சின்னு புரிஞ்சுக்குவோம். பெரிசா, எந்த

இழப்பும் ஏற்படலைன்னு அந்தப் பெண்ணுக்குப் புரிஞ்சுக்க வைக்கணும். தப்பு எங்கயும் நடக்கும்தான். மின்சாரம் தாக்கி வருஷத்துல நாலு பேர் சாகிறாங்க. மின்சாரம் வேண்டாம்னு சொல்ல முடியுமா?

*(சரியாக அதே நேரம் சுசிலா வீட்டுக்குள் நுழைகிறாள். சண்முகம் வெளியேறுகிறார்.)*

**சுசிலா:** என்ன சொல்றார், சண்முகம் சார்?

**ஆசிரியர்:** அதை விடுங்க. வியாபாரம் எப்படி நடக்குது?

**சுசிலா:** கண்ணனோட, கீதாவோட, சேதுவோட உதவியெல்லாம் சேர்ந்ததால, நல்லாவே நடக்குது.

**கீதா:** உங்க உழைப்பு? இவ்வளவு அடக்கம் கூடாதுக்கா, பெண்களுக்கு...

**சுசிலா:** இருக்கு. அது போகட்டும். சார், சரக்குக்கு புதுசா இடம் பிடிக்கணும். நம்ம ஏரியா இன்ஸ்பெக்டர்கள் தேடிப் போயிருக்காங்க.

**கீதா:** யார், ஏரியா இன்ஸ்பெக்டர் தெரியுமா?

**ஆசிரியர்:** தெரியலையே...

**கீதா:** ரேணுகாவும், தெய்வநாயகியும்.

**ஆசிரியர்:** கம்பெனியிலிருந்து எல்லாரையும் இழுத்திட்டீங்களா, சுசிலா?

**சுசிலா:** நான் இழுக்கலை, சார். என் மேல் உள்ள அன்பால், என்னோட சேர்ந்து உழைக்க வந்திருக்காங்க... ஆமா, கதையை எப்படி சார் முடிக்கப் போறீங்க?

**ஆசிரியர்:** எங்க முடிக்கணும்னு தோணுதோ, அங்க முடிந்ததுன்னு போடுவேன்.

**சுசிலா:** எல்லாத்துக்கும் சொல்யூஷன் - தீர்வு சொல்ல வேண்டாமா சார்?

**ஆசிரியர்:** வேணாமே. வாழ்க்கை, மகாநதி மாதிரி ஓடுது. அந்த ஓட்டத்துல, எல்லாரும் அவங்க அவங்க தீர்வுகளை அவங்க அவங்களே பண்ணிக்குவாங்க. பாத்திரங்களை நடமாட விடறதுதான் என் வேலை. அவங்களுக்கு இருக்கிற சொந்த மூளையால் அவங்களை அவங்க பாத்துக்குவாங்க..

**சுசிலா:** வாங்க சார், நாம் எல்லாரும் சேர்ந்து சாப்பிடப் போலாம்.

**ஆசிரியர்:** வேற வேலை இருக்கு. ஆனா, அதைவிட நீங்கதான் எனக்கு முக்கியம். வாங்க போகலாம்...

**(நிறைந்தது)**

வணக்கத்துக்குரிய வயிறே... 13

# உணவோடு சேர்ந்து நாரும்...

இந்த மருத்துவத் தொடர் வெளிவரத் துவங்கியதிலிருந்து, விசாரணைகளும் சந்தேகங்களும் எந்த நோய் குறித்து மிக அதிகமாக வரத்தொடங்கியது தெரியுமா? மூலாதாரமான பைல்ஸ் குறித்துத்தான்.

மூல நோயைப் பற்றிய பொதுவான சந்தேகங்கள்...

**மூலம் என்றால் என்ன?**

அசுத்த இரத்தத்தைக் கொண்டு போகும் இரத்தக் குழாயில் ஏற்படும் முடிச்சுதான் மூலம். இந்த முடிச்சு ஆசனவாய் அருகே உள்ள இரத்தக் குழாயில்தான் விழும். ஆசன வாய்க்கு அருகிலே உள்ள இரு இரத்தக் குழாய்களும் ஏதோ ஒரு காரணத்தால் பாதிக்கப்பட்டு, வீக்கமோ, கட்டியோ விழுந்தால் மூல நோய் ஏற்படுகிறது.

**மூலம் ஏன் ஏற்படுகிறது?**

கடும் மலச்சிக்கல் (கிரானிக் கான்ஸ்டிபேஷன்) தொடர்ந்து இருப்பது தான் மிக முக்கியக் காரணம்.

* குடும்ப மருத்துவ வரலாறு, சீதோஷ்ணம், வயது, உடலுறவு, கருவுற்றிருக்கும் நிலை மற்றும் இதர பாகங்களில் ஏற்படும் இரத்தப் போக்கை அடக்குவது போன்றவையும், மூலத்துக்குரிய சில காரணங்கள்.

* ஆசனவாய் சார்ந்த குழாயில் எரிச்சல், ஆசன வாயின் தசைகள் முறையாகச் சுருங்கி விரியாத இறுகிய நிலை, மலக்குடலில் புற்று நோய் போன்றவை மற்றக் காரணங்கள்.

**மூல நோயின் அறிகுறிகள் யாவை?**

மலக்குடலில் வீக்கம், எரிச்சல், மலம் கழிக்கும்போது வலி, அரிப்பு இரத்தப் போக்கு போன்றவை. சிலருக்கு மலம் கழித்தாலும், கழித்த உணர்வே இல்லாமல் மறுபடி கழிப்பறை அவஸ்தை ஏற்படும். ஒரு சிலருக்குச் சளி வெளியேறும். மூலக் கட்டி இடம் விட்டு கீழிறங்குவது போன்ற அசௌகரியமும் நேரும்.






டாக்டர் எஸ். அசோக்



''மன்னா, நீதி நிலைமை மோசமாக உள்ளது?''

''ஆமாம். இனி என்னைப் புகழ்ந்து பாடும் கவிஞர்களுக்கு கௌரவ வாழ்த்து அட்டை மட்டும் கொடுங்கள். பொற்காசுகள் கொடுக்க வேண்டாம் மந்திரியாரே!''

- எஸ். முகம்மது யூசுப்

**மூல நோயை எப்படி குணப்படுத்துவது?**

மூலம் ஆரம்பக் கட்டத்தில் இருந்தால் மருந்து சாப்பிட்டே குணப்படுத்தி விடலாம். நார்ச்சத்து நிறைந்த உணவு உண்பதும், மலம் இளக்கிகளைச் சாப்பிடுவதும் நல்ல பயன் தரும்.

ஸ்கிளிரோ தெரபி, க்ரையோ தெரபி, ரப்பர் பேன்டேஜிங் தெரபி போன்ற பழைய சிகிச்சை முறைகள் எல்லாம் பின் வாங்கிவிட்ட நிலையில், லேசர் தொழில் நுட்ப சிகிச்சை முறைதான் சர்வதேச அளவில் பிரபலமாக உள்ளது.

இந்தச் சிகிச்சையின்போது மயக்க மருந்து தர வேண்டியதில்லை. சிகிச்சையின் போதும், அதற்குப் பின்பும் கூட சிறிதும் வலி இருக்காது. இந்தச் சிகிச்சைக்கான மொத்த நேரமே பதினைந்து நிமிடங்கள்தான். கத்தி இல்லை, இரத்தம் வீணாவதும் இல்லை. ஆனால் இந்த லேசர் சிகிச்சை முறை, முதல் நிலை, இரண்டாம் நிலை மூல நோயாளிகளுக்குத்தான் பயன்படும். வெளிமூலத்துக்குப் பயன்படாது.

**ஸ்டேப்ளர் முறை**

தற்போது மிக அதிக அளவில் செயல்படுத்தப்படும் முறை புதுசு. ஆனால் ரொம்ப சிம்பிள். செலவும் அதிகம். மூலம் முற்றிய நிலையில் ஸ்டேப்ளரே சிறந்தது.

ஸ்டேப்ளரின் மூலம் மூலத்தின் உள் தசைகள் வெட்டப்பட்டு, தைக்கப்பட்டு, முழு நிவாரணம் தரப்படுகிறது.

பொதுவாக வெளிமூலத்துக்கு ஸ்டேப்ளர் அறுவைச் சிகிச்சைதான் சிறந்தது. மிக எளிய, வலியற்ற அறுவைச் சிகிச்சை செய்து நிவாரணம் பெறலாம்.

''மூலத்துக்கு மட்டும் இத்தனை சிகிச்சை முறைகள் எதற்கு? ஒரே மாதிரியான சிகிச்சை தரக் கூடாதா?'' என்று கேட்கலாம்.

மூல நோய் ஏற்பட பல காரணங்கள் இருப்பதாலும், பரம்பரை, வயது, உடல் ஆரோக்கியம் போன்ற பல விஷயங்களையும் கண்டறிந்து, நோயின் நிலையைப் பொறுத்து, அதற்கேற்ற சிகிச்சை தர வேண்டியிருக்கிறது.

**மூல நோய் வராமலிருக்க என்ன செய்யணும்?**

திரும்பத் திரும்ப அதே மந்திரம்தான். மறுபடி ஒலிக்க வைக்கிறேன்.

- உணவோடு சேர்ந்து நாரும் உட்கொள்ளுங்கள். கோதுமை, பார்லி, ஓட்ஸ், கார்ன், கீரை, காய்கறி, வாழைத் தண்டு, பழவகை இத்யாதி நார்ச்சத்துள்ள உணவுகள்.
- குறைந்தபட்சம், எட்டு தம்ளர் சுத்தமான நீர் பருகவும்.
- நீண்ட நேரம் ஒரே இடத்தில் உட்காருவது அல்லது நிற்பதைத் தவிர்க்கவும். அது ஆசன வாய் சார்ந்த மலக்குடலின்மீது அழுத்தத்தை ஏற்படுத்தும்.
- மூலத்தை எரிச்சலூட்டி அதிகப்படுத்தும் காபி, டீ, மது போன்றவற்றைத் தவிர்க்கவும்.
- Hurry, worry, curry... வாழ்க்கையைத் தவிர்த்து அமைதியாக வாழப் பழகுங்கள்.

**எனக்கு 'ரெக்டம் பாலிப்' தொந்தரவு மூன்று வருடமாக உள்ளது. என்ன செய்வது?**

- பத்மா ராமகிருஷ்ணன், சென்னை - 37

ரெக்டம் பாலிப் என்பது ஆசனவாயில் ஒட்டியபடியே தொங்கிக் கொண்டிருக்கும் ஓர் எக்ஸ்ட்ரா இரத்த நாளம். தினசரி மலம் கழிக்கும்போது அதன்மீது உரசல் ஏற்பட்டு, அது இன்னும் பெரிதாகி, சில சமயம் வீங்கி, ரத்தமும் வடியும். இதை லேஸர் மூலமாகவோ, எளிய அறுவை சிகிச்சை மூலமாகவோ மீண்டும் வராதவாறு நீக்கிவிடலாம். அப்படியே கவனக்குறைவாக விட்டால், அது அல்ஸராகி, கேன்ஸராவதற்கு வாய்ப்புள்ளது.

# ஏக்கம்



அமரர் கல்கி நினைவு
இளமைச் சிறுகதைப்
போட்டியில்
பிரசுரத்துக்குத்
தேர்ந்தெடுக்கப்பட்ட
சிறுகதை

ஆனந்த் ராகவ்

வின்செண்ட், சாலை ஓரமாக சைக்கிளை நிறுத்தினான். கேரியரில் கட்டியிருந்த அலுமினியப் பெட்டியைக் கட்டவிழ்த்து பூட்டை விடுவித்துத் திறந்து, ஒன்றிரண்டு மிக்ஸர் பொட்டலங்களை கையில் எடுத்துக்கொண்டான். பெட்டியை மறுபடி பூட்டி விட்டு, பொட்டலங்களோடு பாய் கடையில் நுழைந்தான். பாயிடம் பணம் வசூலித்துக் கொண்டு திரும்பி சைக்கிளுக்கு வந்தான். மிதிவண்டியின் ஸ்டாண்டை விடுவித்ததும் கேரியரில் கட்டி வைத்திருந்த அலுமினியப் பெட்டியின் பளுவில் சைக்கிள் அவன் மேல் சாய்ந்தது. தாங்கிப் பிடித்து அரைப் பெடல் அடித்து, காலை முன் பக்கமாய்ப் போட்டு ஏறும்போது, சாலை ஓரக் கற்களில் சிக்கி சக்கரம் சறுக்கியதில் சைக்கிள் தடு மாறி ஆடியது. பின்னால் வந்த ஒரு துரித மோட்டார் சைக்கிள் கொஞ்சம் வளைந்து "பார்த்துப் போடா சாவு கிராக்கி" என்று ஹாரன் பின்னணியோடு திட்டிச் சென்றது. ஆடிய சைக்கிளை நிலைப்படுத்தி, கீழே விழாமல் சீராக்கி, பெடலை மிதித்தான். அந்த அரை நிமிடப் போராட்டத்தில் உடம்பு படபடத்து வியர்த்திருந்தான்.

மற்ற இளைஞர்களெல்லாம் விதவிதமாய் மோட்டார் சைக்கிளில் சுற்றிக் கொண்டிருக்க, தான் மட்டும் வீட்டின் தரித்திரச் சுமையில் கடை கடையாய் மிக்ஸர், காராபூந்தி விற்க சைக்கிள் மிதித்துக் கொண் டிருந்தது வின்சென்டின் இருபது வயது உல்லாச மனநிலைக்குக் கடினமாகத்தான் இருந்தது.

தீயணைப்புப் படையிலிருந்து விபத்தில் கால் இழந்த அப்பா, சர்க்கார் சலுகையில் ஆற்காடு ரோடில் ஒரு தொலைபேசி பூத்தில் முடங்கிப் போவதற்கு முன், அதை எதிர்நோக்காத காலத்தில் வின்சென்டுக்குப் பிறகு இரண்டு தங்கைகள் வேறு சம்பாதித் திருந்தார். அம்மா விருகம்பாக்கத்தில் ஒரு வீட்டில் செய்யும் சமையல் வேலை தவிர, வீட்டோடு வியாபாரமாய் பூந்தி, மிக்ஸர், கார வகைகள் செய்ய, வின்சென்டும் அவன் தங்கைகளும் வீட்டு வியாபாரத்தில் உதவுகிறார்கள்.

அம்மா செய்யும் மிக்சரை பாலிதின் பாக்கெட்டில் அடைத்து, மிதிவண்டியில் கட்டி எடுத்துப் போய், ஆற்காடு ரோடு தொடங்கி, கே.கே நகர், அமிஞ்சிக்கரை, ஷெனாய் நகர், அண்ணாநகர் என்று கடைகளிலெல்லாம் விநியோகித்து, அண்ணாநகர் வரை வருவது சிரமமாக இருந்தது. அவனை விர்ரென்று முந்திச் செல்லும் மற்ற மோட்டார் சைக்கிள்களைப் பார்க்கும்போது, சைக்கிள் மிதிப்பதன் சுமை அழுத்தும். பகல் சுற்றை முடித்துவிட்டு சாயந்திரம் மாலைக் கல்லூரிக்குப் போக வேண்டும். அப்போதும் சைக்கிள்தான். அலுமினியப் பெட்டிச் சுமையை இறக்கி வைத்துவிட்டு சின்னதாய் பாரம் சுமக்கும் சைக்கிள். வின்சென்டுக்குத் தான் பாரம் நாள் பூரா குறைவதில்லை.

அவனது சக்கர வாழ்க்கையில் சதா அந்த மிதிவண்டியோடு இயங்கிய சலிப்பு மேலோங்கி, அதை உணர்ச்சியில்லாமல் அணுகு வான். உட்கார்ந்து மிதிக்கும்போது வெறுப்பு ஆட்கொள்ளும். அதை எப்போதாவது கழுவித் துடைத்து வைப்பது தங்கை ஜான்சியின் வேலை. அந்த இரும்பு எலும்புக்கூடும் பதினைந்து வருஷமாய் இயங்கி, சக்கரங்களுக்கு இடையே வர்ண பிளாஸ்டிக் அலங்காரம், மிருதுவான பிளாஸ்டிக் கையுறை, இருக்கையின் மேல் குஷன், பார் கம்பியின் நீளத்தில் வர்ண பிளாஸ்டிக் துணிப் பட்டுதா என்று அதன் ஆரம்ப கால ஆபரணங்களை இழந்து, தனது ஆதார இயக்கத்தை மட்டும் செய்து கொண்டிருந்தது.

திரு.வி.க பூங்காவைக் கடந்து அண்ணாநகரைத் தொடும் திருப்பத்தில் வரும் போது வேகம் குறைந்து, அந்த 'ஷோ ரூம்' வாசலில் நின்றான்.

அந்த இடம் அவன் சைக்கிள் பயணத்தில் சற்று இளைப்பாறும் இடம். இரண்டு சக்கர வாகனங்கள் விற்கும் ஒரு நிறுவனத்தின் விற்பனை நிலையம் அது. 'கே.ஜி ஆட்டோ' என்று ஒரு பெயர்ப் பலகை பெரிதாக அலங்கரிக்க, சாலையை ஒட்டினாற்போல இருந்த அந்த கட்டடத்தின் வாயிலை ஒட்டிய வலது பக்க முகப்பில் சாலைவாசிகளைக் கவர, ஒன்றிரண்டு மாடல்களில் மோட்டார் சைக்கிள்கள் நிறுத்தப்பட்டிருக்கும். கண்ணாடிச் சுவருக்குப் பின், ஒரு சுழலும் வட்ட மேடை. அதில் சிவப்புத் துணி போர்த்தி, தலைக்கு மேலே, பக்கவாட்டில், மேடைக்குக் கீழே என்று இரண்டு மூன்று திசைகளின் ஒளிப் பாய்ச்சலின் பளீரில், அக்கா தங்கைகள் மாதிரி அணிவகுத்து நிற்கும் அந்த வாகனங்களை வேடிக்கை பார்ப்பது அவனுக்குப் பிடித்தமானது.

முதலாமவள், பளிச்சென்று சிரித்த முகமாய், புஷ்டியான உடம்பில் வர்ண விளக்குகள் பொருத்தி, அலங்காரம் செய்த கல்யாணப் பெண்ணாய் மினுமினுப்பு, தலையை ஒய்யாரமாய்ச் சாய்த்துக் கண் சிமிட்டுவாள். அதன் பிறகு அவள் தங்கை. அக்காளின் சமர்த்தில் பாதிதான் என்றாலும், கல்லூரிக்குப் போகும் துடிப்பான பெண் ஜாடையில், சிக்கென்று அழகு. தொடர்ந்தாற்போல் கடைக்குட்டி, சின்னதாய். அலங்காரம் இல்லாமல் படாடோபம் காட்டாமல் இன்னும் வயசுக்கு வராத பெண் போல, பூஞ்சையாய், அடக்கமாக நின்றிருக்கும். வின்சென்டுக்கு அந்தப் பெரியவள் மேல்தான் கண். அந்த விலையை எட்ட முடியாது என்று தெரியும். கடைக்குட்டியாவது தேறுமா என்று கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறான். அது இருந்தால்கூடப் போதும், இந்த பாரத்தைச் சுமக்க வேண்டாம். சைக்கிள் மிதிக்கும் வேதனை தாங்காமல் இரண்டொருமுறை கேட்டு... சாப்பிடாமல் கோபித்துக் கொண்டு கூட ஒரு தடவை வெளியேறியிருக்கிறான்.

"என்னய்யா செய்யறது... நீயாவது சைக்கிள்ல போற... துரை பீச்சு வரைக்கும் போறான். எலெக்ட்ரிக் டிரெயின்ல தூக்கிக்கிட்டுப் போறான் பாரு... மத்தவங்களைப் பாத்து நமக்கு அது மாதிரி இல்லையேன்னு பாக்காத வின்சென்டு. நம்ம அளவு கூட வசதி இல்லாதவங்க கஷ்டத்தப் பாரு..."

அப்பாவின் வேதாந்தம் அவனைச் சமாதானப்படுத்துவதில்லை.

**பா**ர்த்துக் கொண்டிருக்கும்போது அந்த மிடுக்கான கனவான் வந்தார். அவர் அந்தக் கடையின் மேலாளர். வெள்ளைச் சட்டையில் நீல நிற டை அணிந்து சீருடை மிடுக்கில் இருப்பார். அவர் வின்சென்டின் ஆதர்ச நாயகன். அவரைப் பார்த்தாலே வின்சென்டுக்கு தன்னிச்சையாய்ப் பெருமூச்சு வரும். அவர் பொறுப்பில்தான் அத்தனை வாகனங்களும் இருக்கிறது என்பதும், அவன் பார்க்கும் ஒவ்வொரு நாளும் அந்த நிலையத்தில் இருக்கும் ஏதாவது ஒரு வண்டியை அவர் அலட்சியமாய் ஓட்டிப் பார்த்தபடி இருப்பதும், வின்சென்ட் பார்த்து வியக்கும் காட்சி.

இருக்கும் பட்டாளம் போதாதென்று, தனக்கென்று சொந்தமாய் ஒரு மோட்டார் சைக்கிள் வைத்திருந்தார். வின்சென்ட் விரும்பிய அந்த அமர்க்களமான முதல் வண்டிதான் அவருடையது. இன்னும் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட வாகனம். அந்த மோட்டார் குதிரை மேல் அவர் கம்பீரமாய் சவாரி செய்யும் அழகைப் பார்த்து ரசித்திருக்கிறான்.

அவர் உள்ளே போனதும், வின்சென்ட் வண்டிக்கு அருகில் சென்றான். கண்ணாடிக்கு வெளியே நின்று பார்ப்பதைவிட அருகில் இன்னும் கம்பீரமாக இருந்தது. ஹாண்டில்பார் தோள்கள் உயரமாய் நீண்டு... குனியக் கூடத் தேவையில்லாத சௌகர்யம். பெட்ரோல் டாங்க் வெள்ளை உலோகப் பளபளப்பில் மின்னியது. விசேஷ வண்ணப் பூச்சுடன் பச்சை குத்தினாற்போல் உடம்பெல்லாம் ஸ்டிக்கர் ஒட்டிய எழில். அதன்

"எதுக்கு ஸ்டேஷன்ல சிவப்புக் கம்பளம் விரிக்கறீங்க?"

"கபாலி தன்னோட நூறாவது மாமூலைத் தர ஸ்டேஷனுக்கு வர்றான்!"

- அம்பை தேவா





முகம் அறையும் சிவப்பு வர்ணமும், சக்கரங்களின் உறுதியும் வசீகரமாய் இருந்தன. அதைச் சுற்றி சுற்றி வந்தான். ஒவ்வொரு கோணத்திலிருந்தும் ஒவ்வொரு வடிவ அழகில் மிளிர்ந்தது. அதன் இருக்கைக்கு மேல் கவிழ்ந்து கொண்டு ஓட்டுனர் பார்வையில் வியூகம் பார்த்தான். சாலை அதன் ஊடே அழகாய்த் தெரிந்தது. மிருதுவான மென்மையில் இருந்த இருக்கையைத் தொட்டு அழுத்தினான். நூற்றி நாற்பது வரை அனுமதித்த ஸ்பீடாமீட்டரைக் கண்டு வியந்தான். வேகம் அதிகரிக்கும் திராட்டிலை மெல்லத் திருப்பி மானாசிகமாய் "வ்ரோம்" என்று பறந்தான்.

அவர் திரும்பி வந்தார்... "என்ன தம்பி...பைக்கை ஓட்டி முடிச்சாச்சா?" என்றார் புன்சிரிப்புடன்.

வின்சென்ட் அசட்டுச் சிரிப்போடு பின் வாங்கினான். "சும்மா பாத்தேங்க... விலை எவ்வளவுங்க?"

"நாப்பதாயிரம்... வாங்கிக்கிறியா?"

"ஐய்யோ இல்லைங்க... இப்ப இல்லை."

"பின்ன எப்ப? அந்த சைக்கிளை நல்லா ஓட்டி பழகினப்பறமா... என்று இலேசாய்ச் சிரித்தார்.

அடிபட்டாலும் வின்சென்ட் அவரோடு சேர்ந்து கொஞ்சமாய்ச் சிரித்தான்.

சிந்தாமணி தாண்டி ரவுண்டானா வந்து கோகுல்தாஸ் சாட் கார்னர் முன் நின்றது வின்சென்டின் சைக்கிள். கிட்டத்தட்ட முடிந்துவிட்டது. இன்னும் ஒன்றிரண்டு கடைகள்தான். கோகுல்தாஸ் கடையில் பொட்டலங்களைச் சேர்ப்பித்துவிட்டு, வெளியே வந்து சாலையோரம் நடந்தான். சாலை ஓரமாய் ஷோ ரூம் மேலாளரின் சிவப்பு மோட்டார் சைக்கிள் நின்றிருந்தது. பேல் பூரி, பானி பூரிக்காக வந்தவர்களின் ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள்களில் நடுவே இருந்தாலும், வின்சென்ட் கண்ணில் அது பளிச்சென்று தெரிந்தது.

பத்தடி தள்ளி மரத்தடியில் அவர் தெரிந்தார். சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு எதையோ வெறித்துப் பார்த்தபடி நின்றிருந்தார். கொஞ்ச நேரத்துக்கு முன் கண்களில் தெரிந்த கம்பீரம் கரைந்து போயிருந்தது. அவன் தனித்தன்மை விலகி, சூழ்மியிருந்த அந்த ஜனங்களில் ஒருவராகத் தெரிந்தார். அவர் பார்த்த திசையில் சாலை ஓரமாய் நிறுத்தி வைத்திருந்த அந்த படாடோபமான படகுக் கார் இருந்தது. வின்சென்ட் அவர் தன்னைப் பார்த்தால் புன்னகைக்கத் தயாராய்க் காத்திருந்தான். அவர் இவன் பக்கம் திரும்பாமல், கண் விலக்காமல் காரைப் பார்த்துக் கொண்டு நின்றிருக்க, சற்றுமுன் தன் பார்வையிலிருந்த ஏக்கம் அவர் கண்களுக்கு இடம் மாறியிருக்கக் கண்டான்.

வின்சென்ட் திரும்பி நடந்து சைக்கிளை எட்டினான். சைக்கிளைத் தள்ளி ஏறி மிதித்தான். உந்த உந்த இலேசாக கீச் கீச் சப்தம் வந்துகொண்டே இருந்தது. இறங்கி ஸ்டாண்ட் போட்டு வெறும் பெடலை மிதித்துப் பார்த்தான். பின் சக்கரத்தை ஒட்டிய தகடு கொஞ்சம் வளைந்து சக்கரத்தை ஓரிடத்தில் உரசியது தெரிந்தது. ஸ்குரு டிரைவர் வைத்துக் கொஞ்சம் நெம்பினால் சரியாகிவிடும் என்று தோன்றியது. அப்படியே சைக்கிளைக் கழுவி எண்ணெய் போட்டு, கொஞ்சம் துடைக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். ◉



* திருமூர்த்தி அருவி

**பொ**ள்ளாச்சி முக்கொட்டை நிலக்கடலைக்கும் தேங்காய்க்கும் பெயர் பெற்ற ஊர். இதைச் சுற்றி நிறைய கயிறு, மஞ்சி பதப்படுத்தும் தொழில் நடை பெறுகிறது.

கைத்தறிச் சேலைக்கும் கை முறுக்குக்கும் புகழ் பெற்றது நெகமம்.

பல இடங்களுக்கு கை முறுக்கு செல்கிறது.

'காயர் ஆன்' படுக்கைகள் பொள்ளாச்சி யில் தயாரிக்கப்படுகின்றன.

ஆனை மலை மாசாணி அம்மன் கோவில் மிகவும் சக்தி வாய்ந்து.

உடுமலையில் திருமூர்த்தி மலை மிகவும் சிறப்பு வாய்ந் தது. உடுமலைக்கு குடிநீர் விநியோகமும் இங்கிருந்து தான். சிறுவாணிக்கு அடுத்து ருசியான குளிர்ந்த நீரைக் கொண்டது இந்த மலை.

உடுமலையில் சிறந்த கல்வி நிறுவனங்கள் பலவற்றை கெங்குசாமி நாயுடு நடத்துகிறார். இவர் நடத்தும் காகித மில்களால் பல குடும்பங்கள் வாழ்கின்றன.

- சாய் வல்லி, உடுமலை

படங்கள் உதவி : சிவகுருநாதன்



* கெங்குசாமி நாயுடு

**கோ**யம்புத்தூர் - புலியகுளம் பகுதியில் நான்கு சாலைகள் சந்திக்கும் இடத்தில் அருள்மிகு முந்தி விநாயகர் திருக்கோவில் உள்ளது.

அவ்வழியே செல்பவர்கள் அனை வரும், நடந்து செல்பவர்கள் முதல், இரு சக்கர வாகனங்களிலும், நான்கு சக்கர வாகனங்களில் செல்பவர் வரை, தங்களது வாகனங்களிலேயே மூன்று சுற்றுகள் சுற்றிவிட்டு கன்னத்தில் போட்டுக் கொண்டு செல்வது அபாரமான காட்சி.

- க.வே.சுப்ரமணியன், கோவை



* மாசாணி அம்மன்

**கோ**வையில் போகிப் பண்டிகையன்று மாலையில் 'காப்பு கட்டுதல்' என்று செய்வார்கள். பூளைப்பூ, வேப்பிலை கொத்து, மாவிலை மூன்றையும் சேர்த்து வீட்டின் நாற்புறமும் செருகுவார்கள். இப் படிச் செய்தால் மங்கலம் பொங்

கும் என்று ஐதீகம்.

கோவையில் கடற்கரை கிடையாது. ஆனால் லைட் ஹவுஸ் ரோடு உண்டு. குதிரைப்பந்தயம் இல்லை. ஆனால் ரேஸ் கோர்ஸ் ஏரியா உண்டு. சுடுகாடு இல்லை. ஆனால் பரியல் கிரவுண்டு பஸ் நிறுத்தம் உண்டு!

புகழ்பெற்ற கடைவீதியான ஒப்பணக் காரத் தெருவை யாரும் முழுமையாகச் சொல்வதில்லை. மருவி, மருவி 'பணக்காரத் தெரு' ஆகிவிட்டது.

**- அனுஜெய், கோவை**

சத்யராஜ், சிவகுமார், கோவை சரளா, கவுண்டமணி, மணிவண்ணன், பாக்யராஜ், இயக்குனர் சுந்தர்ராஜன் போன்ற கலைஞர் களைத் திரையுலகுக்குத் தந்தது கோவை மாவட்டம்.

## வாசகர் பங்கு



# ரஜினி ஹர்ராரு டோய்!

கோவையிலிருந்து பதினெட்டு மைல் தொலைவில் அவினாசி ரோடில் உள்ள சிறிய ஊர் கருமத்தம்பட்டி. இங்கு வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கும் ஜெபமாலை அன்னையின் கீர்த்தி பெரிது.

வருடத்திற்கு ஒரு முறை கொடி ஏற்றி நவநாள் சிறப்பித்து வேண்டுதல் தேர் எடுத்து, அக்டோபர் முதல் ஞாயிறு அன்று தேர்த் திருவிழா கொண்டாடப்படுகிறது. அது சமயம் லட்சத்திற்கும் அதிகமானவர்கள் மதப் பாகுபாடின்றி, அன்னையைத் தரிசித்து, வேண்டிய வரங்களைப் பெற்றுச் செல்கிறார்கள். வருடா வருடம் தேர் எடுக்கும் நேரமாகிய இரவு எட்டு மணிக்கு, வருணபகவான் தூறல் போட்டு வாழ்த்தும் அதிசயம் தொடர்கிறது.

நாள் தோறும் உலகில் ஒற்றுமை, சமாதானம் நிலவ, ஜெபமாலை ஜெபித்து அன்னையை வழிபடுகின்றனர்.

**- ரொசாரியோ ரவிச்சந்திரன்,சென்னை**

குற்றாலத்தை நினைவூட்டும் திருமூர்த்தி மலையும், வானரங்கள் கனி கொடுத்து மந்தியோடு கொஞ்சி விளையாடும் 'மங்கி ஃபால்ஸ்' அருவியும், மிலிட்டரி ஸ்கூல் அமைந்துள்ள அமராவதி நகரும் காடம் பாறை பவர் ஸ்டேஷனும் எங்கள் கோவைக்குப் பெருமை சேர்ப்பவை. அமைதியும், எழிலும் கொஞ்சும் ஆனைகட்டிக்கு நடிகர் ரஜினிகாந்த் அடிக்கடி தியானம் செய்ய வருகிறார்.

**- மணிமேகலை, கோவை**



* மாதாஜி கிருஷ்ணாபாய்



* குருஜி
பப்பா ராமதாஸ்

# ராம நாமத்துக்கு ஓர் ஆஸ்ரமம்!

நகர வாழ்க்கையோ, கிராம வாழ்க்கையோ ஒவ்வொரு நாளும் மனித வாழ்க்கை அலறலாகத்தான் நகர்ந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு அசைவும் மிகுந்த வலியைத் தருவதாகத்தான் இருக்கிறன.

இதிலிருந்து மீள என்ன செய்வது? பிரச்னையை எதிர்கொள்ளும் பலம் எங்கே கிடைக்கும்? அமைதிதான் ஆரவாரத்துக்குச் சரியான பயிற்சி.

இந்த அமைதி எங்கே கிடைக்கும்?

மங்களூருக்கு அருகே கஞ்சன்காடு மலையடிவாரத்தில் பசுமைப்பள்ளத்தாக்கில் பல குடில்களோடு பப்பாராமதாஸ் என்பவரால் நிறுவப்பட்ட ஆனந்தாஸ்ரமம் போய் நீங்கள் தங்கலாம். அந்த மூன்று நாட்களும் இடையறாது, ராமநாமம் சொல்லலாம்.

நீங்கள் இடையறாது ராமநாமம் சொல்ல வேண்டும் என்பதற்காகவே அங்கே உங்களுக்கு இலவசமாக உணவிட்டு, துணிகளைத் துவைத்து, சகல வசதிகளையும் செய்து தருகிறார்கள். வேறு எதுவும் செய்ய வேண்டாம். ஆனந்தாஸ்ரமம் வந்து தங்கி ராமநாமம் சொல்லுங்கள் போதும் என்பதுதான் அவர்கள் கோரிக்கை. இந்த ராமநாமம் உங்கள் மனத்தை அமைதிப்படுத்தும். புத்துணர்ச்சி கொடுக்கும். இங்கே கிடைத்த இந்தப் பக்குவத்தை நீங்கள் உங்கள் வீட்டில் விரிவுபடுத்திக் கொள்ளலாம்.

வியாபாரியாக வாழ்க்கையைத் துவக்கியவர், பணம் சம்பாதிப்பதில் உண்டான வேதனையை அறிந்தவர். ஸ்ரீரங்கத்துக் காவிரியில் குளித்து சகலமும் துறந்துவிட்டு ஸ்ரீராமனுக்குத் தாஸராக - ராமதாஸராக மாறினார். இடையறாது ராமநாமம் சொல்லிச் சொல்லி தான் கண்ட பேரின்பத்தை மற்றவரோடு பகிர்ந்து கொண்டார். ராமநாமம் சொல்லிச் சொல்லி அந்த ஆனந்தாஸ்ரமம் அற்புதமான அதிர்வில் மூழ்கிக் கிடக்கிறது. எவர் உள்ளே போனாலும் அந்த ஜோதியில், அந்த அமைதியில் ஐக்கியமாகிவிட முடியும்.

பப்பா ராமதாஸுக்கு மாதாஜி கிருஷ்ணாபாய் சிஷ்யராக வந்து சேர்ந்தார். தமது குருவே சகலமும் என ஏற்று அவர் பாதங்களைப் பற்றிக் கொண்டு ஆஸ்ரமத்தை மிகச் சிறந்த முறையிலே வளர்த்தார்.

மாதாஜியின் பிறந்த நாள் விழா செப்டெம்பர் இருபத்தேழாம் தேதி அன்று சென்னை, தியாகராய நகர் ராமாராவ் கலாமண்டபத்தில் கொண்டாடப்பட்டது.

**பாலகுமாரன்**

**சா**யந்திர நேரத்தில் மழைக்குருவி கம்பத்துக் கொடியில, உப்புக்கண்டம் கோத்து காயப்போட்ட மாதிரி உக்காரத் தொடங்கிடும். நானும் தம்பிப் பாப்பாவும் தோட்டத்துப் பாறையில கல் தும்பி பிடிக்கப் போயிடுவோம். அம்மா கண்ணுல படாம சின்னவனும் பெரியவனும் எங்க கூடவே வந்து சேர்ந்துக்குவாங்க.

அண்ணன் எங்கேயாவது உட்டக் காட்டுல நின்னுட்டு, சிட்டுக் குருவி கத்தறமாதிரி சின்னதா ஒரு சிக்க விடுவான். அவ்வளவுதான் எங்க சின்னவனும் பெரியவனும் காத்தா பறப்பாங்க. அவங்க ஓடற ஓட்டத்தில மண் ஆள் ஒயரத்துக்கு புழுதியா பறக்கும்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அண்ணன், கையில ஒரு உடும்போட வருவான். சின்னவனையும், பெரியவனையும் பெருமையா தடவி, அவனுங்க வயித்த ரொப்பிட்டு தான் எல்லாத்தையும் சொல்லுவான். முன்னாடி சின்ன நாய் பெரிய நாய்னு சொன்னாலும், இப்ப சின்னவன் பெரியவன்னே பேர் வச்சாச்சி.

**க**ம்மம் பயிர் நடவுக்கு வரும்போது ஒரு நாள் எங்க சின்னபாட்டி, ஒரு வெள்ள வெளேர்ன்னு இருக்கிற நாய்க்குட்டிய எடுத்திட்டு வந்தா. தோட்டத்துக்கு நடந்து வந்ததே பெருசு. அதுல நாய்க்குட்டியும் எடுத்திட்டு, ஆத்துலயும் வேற எறங்கி ஏறி வந்திட்டா. பாட்டி, நாய்க் குட்டிய மொதல்ல அப்பாகிட்டதான் குடுத்தா. "போயும் போயும் கெழவி பொட்டக் குட்டிய எடுத்திட்டு வந்திட்டாளே...!"ன்னு அப்பா திருப்பி அனுப்பப் பாத்தாரு.

அந்த நாய்க்குட்டிய வுட எங்களுக்கு மனசே இல்ல. அன்னிக்கியே கழுத்தில ஒரு துணியக் கட்டி, பிடிச்சிட்டு தோட்டத்த சுத்திவரத் தொடங்கிட்டோம். தூங்கும்போதுகூட எங்களோடதான் இருக்கும். தம்பி, பாப்பாவோட அம்மாவுக்கும் சேத்து ஒரே போர்வைதான். அதுங்குள்ள எங்கியாவது ஒரு எடத்தில நாய்க்குட்டியும் தூங்கும்.

அந்தக் குட்டி பெரிசாகி, அது குட்டிப் போட்டு வளந்ததுதான், இப்ப புழுதியில பறந்து திரியற இந்தச் சின்னவனும் பெரியவனும்.

சின்னவனும் பெரியவனும் சின்ன வயசிலயே சத்தம் போட்டுக் கொரைக்கும், அதுங்களுக்கு வேட்டைப் பிடிக்கப் பழகிக்குடுக்க அப்பா படாத பாடுபட்டாரு. உட்டக்காடெல்லாம் அலைஞ்சி, ஒத்தக் கொழுவி அடிச்சி வந்து, அத களியில மறைச்சி ரெண்டுத்துக்கும் சாப்பிடக் குடுப்பாரு. வீட்டுல கறிக் கொழம்பா இருந்தா, அதுகளுக்கும் ஒரு விருந்து உண்டு. எப்பவுமே அதுக படுக்கை பில்லுப் போர் தான்.

எப்பவாவது தோட்டத்து வேலியில ஓணா பிடிக்கப் போனா மட்டும் சின்னவனுக்கும் பெரியவனுக்கும் தெரியாமத்தான் போவோம். இல்லாட்டி முன்ன முன்ன ஓடி, ஓணான முடுக்கி விட்டுடுவான்க.

அப்பா ஆசப்பட்ட மாதிரியே நல்லா வேட்டப் பிடிக்கிற அளவு வளந்திடுச்சி. மாசத்துக்கு ரெண்டு மூணு தடவ மொயலு கெடைக்கும். கூடவே கீரிப்பிள்ள, உடும்பு, இப்படி கறிக்கொழம்புக்கே பஞ்சம் இருக்காது.

வீட்டுக்கு வர சொந்தக்காரங்ககிட்ட மட்டும் சின்னவனும் பெரியவனும் நல்லா பழகுவாங்க. இதுங்கள பத்தி எடுத்துச் சொல்றதில, எனக்கும் தம்பிக்கும் போட்டியே வரும். கேட்டுட்டு அவங்களும் மறக்காம அடுத்தவங்ககிட்ட சொல்லுவாங்க. அம்மாவும் தாத்தாவூருக்கு போகும்போது இதுங்களப் பத்தி எடுத்துப் பேசாம வர்றது இல்ல.

**ஒ**ரு சமயம், விடியக்கால நேரந்தான். ஆட்டுப்பட்டில குள்ளநரி நொழஞ்சி, ஒரு குட்டிய கவ்விட்டுப் போயிடுச்சி. கத்தற சத்தத்த, கேட்டுட்டு இரண்டும் ஓடி குள்ள நரிய வெரட்டிட்டு குட்டிய மீட்டுவந்துட்டாங்க. நாங்களும் ஓடிப் போய்

பாத்தோம். சின்னவன் முன்னாலயும், பெரியவன் பின்னாலயும் வர, ஆட்டுக்குட்டி ரெண்டுத்துக்கும் நடுவுல நொண்டிட்டு வருது. இதுங்களோட பெருமையச் சொல்லித் தாங்கல. சரி.. எல்லா நேரத்திலயும் ஜெயிச் சிடுமான்னு கேட்டா... இல்ல. சில நேரத்தில அதுங்களும் தோத்திடும்.

**ப**னிக்காலத்திலதான் மணந்தார் மண்ணுல வெள்ளெலி வளபோடும். காலைல பாத்தா, அப்பதான் தள்ளின புதுமண் வெதவெதன்னு இருக்கும். வயசு பாக்காம எங்கூட அண்ணனும் சேந்திட்டா எங்க சந்தோசத்துக்கு அளவே இல்ல. ஒரு சிக்க அடிச்சிட்டு நாங்க ஒக்காந்து செடியில மறைஞ்சிக்குவோம். சின்னவனும் பெரிய வனும் பில்லுபோர்ல இருந்து எழுந்து ஓடியாந்துட்டு, எங்களக் காணாம திரு திருன்னு முழிக்குங்க. அடக்க முடியாம வெடிக்கிற எங்க சிரிப்பக் கேட்டுட்டு ஓடிவருவான்க.

வந்து நின்னதும் அதுங்க ஒடம்புல இருந்து பனி சொட்டுச் சொட்டா கொட்டும். கால விரிச்சிவச்சி ஒடம்ப ஒரு சிலுப்பு சிலுப்பும்போது, காதும் வாலும் செருக்க நிக்கும். பனித்தண்ணி சுத்திலும் சிதறி புகையா பறக்கும். நாங்க வெரல நொடிச்சி எலிவளையக் காட்டிடுவோம். அவ்வளவு தான். வளையில வாயவச்சி ஊதி மோப்பம் பிடிக்கும். உள்ள எலி இருக்கிறத அதுங்க வால் ஆடறத வச்சி கண்டுக்குவோம். முன்னங்கால் ரெண்டுலயும் மண்ண பறிக்கற வேகத்தில மண் பத்தடி தூரம்போய் உழும். வேர் செடி எது தடுத்தாலும் கடிச்சி எடுத்திடும். சில நேரத்தில பல்லுல ரத்தம் கூட வந்திடும். ரெண்டுமே ஒண்ணோ டொண்ணு முட்டி மோதி நிக்கும். எங்கவேல அதுங்கள... ஒவ்வொண்ணா பிரிச்சி விடறதுதான். இப்படி ஊதிப் பறிச்சிட்டு இருக்கும்போதே, கொஞ்ச தூரத்தில 'பொதுக்'னுட்டு பத்துப் பன்னி ரண்டு வெள்ளெலி கௌம்பி பக்கத்தில இருக்கற பொதர்ல நொழஞ்சிடும். ரெண்டும் ஏமாந்து நிக்கறதப் பாக்கணுமே. நெரிச்ச காதும், தொங்கின நாக்குமா அப்படியே தலைய மட்டும் ஒரு பக்கம் சாச்சி, எங்கள ஓரக் கண்ணால பாத்திட்டு, வெக்கப்பட்ட மாதிரி திரும்பவும் எலி ஓடின பக்கமே பாக்கும்.

மூஞ்சி வாடிப் போயிடும். மூச்சு வாங்க வவுறு ஒடம்புல ஒட்டி ஒட்டி விரியும். எங்களுக்குச் சிரிப்பா வரும். சின்னவனுக்கும் பெரியவனுக்கும் கோவம் வந்திடும். அதுங் களச் சமாதானப்படுத்தவே புது வேட்டைக்கு போவோம்.

**நா**ன்தான் அன்னக்கி கம்மந்தோட்டத் துக்குத் தண்ணி கட்டினேன். ராத்திரி தோட்டத்தில நொழைஞ்ச ஒரு தனியாம் பன்னி, இதுங்களுக்குப் பயந்து எப்படியோ தோட்டத்திலயே நின்னுடுச்சு. என்னப் பாத்ததும் ஓட்டம் பிடிச்ச பன்னிய சின்ன வனும், பெரியவனும் உடாம தொரத்தி, பக்கத் தில போய் கடிக்கும் போது, பன்னி திரும்பி நின்னு ஒரு அடி அடிச்சது. சின்னவன் ஒரு மார் தூரம் போய் உழுந்திட்டான்.

ஒழுகின ரத்தத்தோட ஒடம்புக்கு முடியாம அன்னக்கிப் படுத்தவன்தான். புண்ணிலிருந்து சீழ் வடிஞ்சி அங்கங்க கொட்டிக் கெடக்கும்.

அடுத்த நான்தான் பாத்தேன். வவுறு உப்பி, ஈமொச்சிட்டிருந்திச்சி. கலங்கிப் போய்ட்டேன். இரண்டுகைலயும் கொழந்தையத் தூக்கிற மாதிரி அள்ளி எடுத்திட்டு வந்து, நானும் தம்பியுமா சேந்து ஆத்தங்கரையில பொதைச்சிக் குழிமேல் ஒரு கல்ல நட்டு வச்சோம். இப்பவும் அந்தக் கல்லு கரவோரத்தில பாத்தா இருக்கும். எல்லாரும் போவுது போன்னு வுட்டுட்டாங்க. அம்மா மட்டும் அழுதிட்டே இருந்தாங்க. எனக்கு அம்மாவப் பாத்ததும் மறுபடியும் அழுக வந்திடுச்சி.

தெரிஞ்சா கோவத்தில வெறிபிடிச்சி கடிக்க வந்தாலும் வருவான்னுதான் நாங்க




- அஜித்லால்

பெரியவனுக்குத் தெரியாம பொதைச்சோம். ஆனா அது கண்டுபிடிச்சிடுச்சி. சின்னவன பொதைச்ச எடத்திலயே போய் ஒக்காந்திட்டு, ராத்திரி பகலா ஏதாவது ஒரு தெசைய பாத்துக் கத்திட்டே இருக்கும்.

பெரியவனுக்கும் உடம்பு எளச்சிப் போச்சி. ஏதோ சொறி வந்திடுச்சி. எலும்பும் தோலுமா ஆகிட்டான். கெழவனாட்டமா கொஞ்ச நாள் தள்ளாடி நடந்தான். "இப்படி பாக்கிறத விட கொன்னுடலாம்"னு அப்பா முடிவு பண்ணிட்டார். கட்டி இழுத்திட்டுப் போய் கிட்டன் ஓடையில இருந்த பெரிய விவசாய மரத்தில சுருக்கு மாட்டி தூக்கிவுட்டுட்டாரு.




என்ன என்ன நெனைச்சிருக்குமோ.. அம்மாவையும் சின்னவனையும்கூட நம்ம மொதலாளிங்க இப்படித்தான் கொன்னுருப்பாங்கன்னு நெனைச்சிருப்பான். நம்மள வளத்தி சோறு போட்ட எஜமானனே இப்படி இழுத்துவந்து கொன்னுட்டானேன்னு நெனைச்சிருப்பான்.

"தூக்கி வுட்டுட்டேன். இந் நேரம் செத்திட்டு இருக்கும்''னு அப்பா திரும்பி வந்து சொல்லிட்டு, திண்ணையில உக்காந்து கொஞ்சநேரம் கூட ஆகல. பெரியவன் கழுத்தில ஊணான்கொடி தொங்க, ஒரே... ரத்தக் காயமா, சோறு போட்ட ஒரே நன்றிக்காக, பழகின பழக்கத்துக்காக மறுபடியும் வந்து வாசல்ல நிக்கிறான்! எல்லாரும் ஒரே நேரத்தில.. ஓ...ன்னு வாய்விட்டே அழுதிட்டாங்க. அம்மா அப்படி அழுது நான் பாத்ததே இல்ல.

பெரியவன் கொஞ்ச நேரம் நின்னு பாத்துட்டு வந்த வழியே திரும்பிட்டான். நான் பின்னாலயே ஓடிப் போய் கேவிக்... கேவி அழுதிட்டே கூப்பிடறேன். திரும்பிக் கூட பாக்காம ஓடிட்டான். என்ன நெனைச்சிட்டுப் போயிருப்பான். "ச்சீப்... போங்கடா..!''ன்னு போயிருப்பானா..? இல்ல கடைசியா ஒரு முற எங்க மொகத்தப் பாக்க வந்தவன், நாங்க அழுறத பாக்க முடியாம திரும்பிட்டானா? நேத்துவரைக்கும் நடக்கவே முடியாம இருந்தவனுக்கு இப்ப மட்டும் எப்படித்தான் ஓட முடிஞ்சிருக்குமோ...

பெரியவன் திரும்பிக் கூட பாக்காம ஓடிட்டான்னு தெரிஞ்சதும் அம்மா தலையிலயும், நெஞ்சிலயும் அடிச்சிட்டு அழ ஆரம்பிச்சிட்டாங்க. அம்மாவத் தேத்த முடியல.

"செய்யக் கூடாத பாவத்த...

செஞ்சிட்டமே..

தூக்கி வளத்த பிள்ளைய...

கொன்னுட்டமே..

கோவத்தில போறானே... மகன் ஒருத்தன்..

கூட்டி வந்து சேத்துக்கப்பா... தர்மமாகும்."

அம்மா வச்ச ஒப்பாரி அப்பா மனச உறுத்தி இருக்கும். அடுத்த வாரமே வீரமணியானுக்குக் காவலா நாய் பொம்ம செஞ்சி வக்கிறேன்னு நேர்ந்திட்டு, மறுபடியும் நாய்க்குட்டி தேட ஆரம்பிச்சிட்டாரு.

**அ**ம்மாவுக்குச் சாவு பழகிப் போச்சி. பாட்டி செத்ததும் இங்கிருந்தே நெஞ்சில் அடிச்சிட்டு ஊருக்கு வண்டி பிடிச்சாங்க. ஒரு வாரம் கழிச்சி வரும்போது புதுப் பொடவையோட பை நெறைய பலகாரமும் வந்திச்சி. தூரத்துச் சொந்தமா இருந்தாலும் சரி... எழவுன்னு சேதி வந்தா போதும். காதுல மூக்கில இருக்கிறத எல்லாம் கழட்டி வச்சிட்டு, ஒரு தொடப்பக்குச்சிய ஒடிச்சி குத்திட்டுப் போய் ஒரு கொரலு அழுதிட்டு வருவாங்க.

விருப்பப்படும் போது மட்டும் அழற அம்மா மனசு மாதிரி இல்ல எனக்கு. நெனைக்கும்போதே நெஞ்சி அடைச்சிக் கனக்குமே, அத மாத்திக்க முடியல. ஆனாலும் ஒரு நாளைக்கு என்னால அழ முடியாமப் போகும். அப்படிப் போனா அம்மாகிட்டதான் கேக்கப் போறேன்.

"அம்மா... சின்ன வயசுல என்னப் பிரிஞ்சிப் போன சின்னவனையும் பெரியவனையும் நெனைச்சி ஒரு முற அழுது காட்டு"ன்னு.

அம்மா அன்னக்கியும் அழுவாங்க. அடிமனசுல அப்போ பதிஞ்சதை மெதுவா பிரிச்சி எடுத்து, நெஞ்சில தேக்கிவச்சிட்டு அம்மா அப்பவும் உண்மையா அழப் போறாங்க. அப்ப நான் அம்மாவைப் பார்த்து அழுவேன். ●



# டார்ஜிலிங் டார்லிங்!

எழுபத்தைந்து வயது முதுமை! இருந்தும் எத்தனை அழகு! பணிமனைத் தண்டவாளத்தில் 'குக்கூ' எனக் கூவியபடி அன்னம் போல் அசைந்து வருகிறது. அதற்குப் புத்துயிர் தந்திருக்கும் உற்பத்திப் பிரிவு தொழிலாளர்கள், அதை 'டார்லிங்' என்றே அழைக்கிறார்கள். ஏன் இப்படியொரு செல்லப் பெயர்?

இமய மலைச் சாரலின் எழிலை ரசிப்பதற்கென்றே ஆங்கிலேயர்களால் தொடங்கப்பட்டது டார்ஜிலிங் ஹிமாலயன் ரயில்வேஸ். கடந்த எழுபத்தைந்து ஆண்டுக் காலமாய் இந்த ரயில்வே பிரிவுக்காக, டார்ஜிலிங் மலைமீது நிலக்கரிப் புகையைக் கக்கியபடி இடையறாது ஓடி, சுற்றுலாப் பயணிகளை மகிழ்வித்து விட்டு இப்போது திருச்சிக்கு வந்திருக்கிறது இந்த நீராவி என்ஜின். எதற்கு? டார்ஜிலிங் சுற்றுச் சூழலை நிலக்கரிப் புகை மாசுபடுத்திவிடக் கூடாது என்று, நிலக்கரிக்குப் பதிலாக எரிஎண்ணெய் பயன்படுத்தி இயங்கும் நீராவி என்ஜினாக மாற்றப்படுவதற்கு! இந்த மாற்றம் இதன் புராதன அழகிய டிசைனுக்கு சிறு பங்கத்தைக் கூட இழைத்து விடக் கூடாது என்று முடிவு செய்த டார்ஜிலிங் ரயில்வே, இந்த நிபந்தனையோடு சர்வதேச டெண்டர் அறிவித்தது. பன்னாட்டு நிறுவனங்கள் இதற்குக் கோரிய குறைந்தபட்ச மதிப்பீட்டுத் தொகை, பத்துக்கோடியே நான்கு லட்சம் ரூபாய். அதிர்ந்து போனது டார்ஜிலிங் ரயில்வே. ஆனால் திருச்சி பொன்மலை ரயில்வே பணிமனை, வெறும் ஒரு கோடி ரூபாயில் செய்து தந்திருக்கிறது. இப்போது 'டார்லிங்' போலவே அச்சு அசலாக மேலும் மூன்று புதிய டார்லிங்குகளை டார்ஜிலிங் ரயில்வேக்காக உருவாக்கிக் கொண்டிருக்கிறது.







ஐ.எஸ்.ஓ. உலகத்தரச் சான்று பெற்ற, இந்தியாவின் மிகப் பெரிய ரயில்வே பணிமனைக்கு இப்போது பவள விழா.



• பணி மேலாளர் ஜி.ஆர்.கே. ராஜு

நீங்கள் கேட்டவை
—தராசு

* 'திருத்து' முனை...?

# 'பாய்ஸ்' எதிர்ப்பு திரையுலகைத் திருத்துமா..?

● எஸ்.ராஜேஸ்வரி, போடிநாயக்கனூர்

? எம்.எல்.ஏ. ரங்கநாதனுக்கு (துப்பாக்கி காட்டி மிரட்டிய வழக்கில்) மகாத்மா காந்தி புத்தகங்களைப் படிக்குமாறும் 'சத்திய சோதனை' நூலை வாங்குமாறும் நீதிபதி தண்டனை விதித்திருப்பது பற்றி...?

! நீதிபதி, குற்றம் சாட்டப்பட்ட ஒருவருக்குத்தான் இப்படித் தண்டனை வழங்க முடியும்; அரசியல்வாதிகள் அனைவருக்குமா இதை விஸ்தரிக்க முடியும்!



* அதிர்ஷ்ட அளவுகோல்!

● சம்பத், வேலாயுதம்பாளையம் □

? நக்கீரன் கோபால் வழக்கிலும் தர்மபுரி மாணவிகள் எரிப்பு வழக்கிலும் தமிழக போலீஸாரின் ஒருதலைப்பட்ச அணுகுமுறை கடுமையான கண்டனத்துக்குள்ளாகியிருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! நான் என்ன நினைத்து என்னவாகப் போகிறது? மக்கள் வோட்டுப் போடும் போது இந்த கண்டனங்களை மறந்துவிட்டுக் குட்டிக் கதைகளை மட்டும் நினைத்துக் கொண்டு செயல்பட்டால்..!



* இரட்டைப் பொறுப்பு!



* ஸ்ரீ 'லட்சுமண' ஜெயம்!

● ஜெயஸ்ரீ மகேந்திரன், சங்கரன்கோவில் ★

? பேய் பீதி பற்றி...?

! Willing suspension of disbelief என்று

ஆங்கிலத்தில் சொல்வார்கள் கவியுள்ளங்களுக்கு மட்டுமல்ல இப்படிப் பேய்க் கதை கட்டும் உள்ளங்களுக்கும் அதை நம்பும் உள்ளங்களுக்கும் கூட அது பொருந்தும்.

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி

? எடுபிடிகள், அடியாட்கள், தொண்டர்கள்... என்ன வேறுபாடு சார்...?

! எடுபிடிகள் : சொன்ன காரியத்தைச் செய்துவிட்டுப் போகிறவர்கள். அடியாட்கள் : வன்முறையைப் பயன்படுத்தி காரியத்தைச் சாதிப்பவர்கள். தொண்டர்கள் : கூட்டமாய்த் திரண்டு கோஷமிட்டுக் கலைபவர்கள். எல்லோரையும் இன்று இயக்குவது பணம், பணம், பணம் மட்டுமே.

● ப.லக்ஷ்மி நரசிம்மன்,
கோவை - 11

? கான்குன் உலக வர்த்தக மாநாடு தோல்வியடைந்துள்ளதே...?

! வளரும் நாடுகளின் நோக்கில் அநீதியான நிபந்தனைகள் (வர்த்தகத்துக்கு) விதிக்கப்பட்டதால் போராட்டம்; புறக்கணிப்பு. வாழ்க அந்நாடுகளின் ஒற்றுமை!

● ப.கா. மணிமொழியன், நாகமலை

? "அவதூறுத் துறை என ஏற்படுத்தி, அவதூறுக்கு அமைச்சர் நியமனம் செய்யப்பட்டாலும் ஆச்சரியமில்லை" என்று ஜி.கே. மணி சொல்வது குறித்து...?

! மணியான நகைச்சுவை என்று சிரித்தாலும், சிந்திக்கையில் அபாய மணி ஒலிப்பது கேட்கிறது.



* சிக்கிய...

* ... சான்று!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

? நாடு முழுவதும் கேந்த்ரிய வித்யாலயா பள்ளிகளில், ஆசிரியர்களின் பணித் தரத்தை அப்பள்ளி மாணவர்களே மதிப்பிடப் போகிறார்களாமே?

! மிகவும் தவறான முடிவு. ஆசிரியரிடம் நல்ல பெயர் வாங்க வேண்டும் என்று மாணவர்கள் விரும்பும் நிலை போய், மாணவர்களிடம் நல்ல பெயர் எடுக்க ஆசிரியர்கள் முயற்சி செய்தால் என்ன ஆகும்? ஆசிரியர் - மாணவர் நல்லுறவு கொச்சைப்படுத்தப்படும். பண்பாடு சீர்குலையும். அமெரிக்காவில் இந்த யோசனை பட்ட மேற்படிப்பு போன்ற உயர் நிலைகளில் அமலாகிறது. பள்ளிக்கூடங்களில் அல்ல.

● ஜோ. பன்னீர் செல்வம்,
சென்னை - 12

? "பத்திரிகைகள் தங்களுக்கான எல்லையை 'லட்சுமண் கோடு' போல தாங்களே வகுத்துக் கொள்ள வேண்டும்"

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :

எம். சம்பத், 47, மலைவீதி தெரு, வேலாயுதம்பாளையம், கரூர் மாவட்டம் - 639 117.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :

ஜெயஸ்ரீ மகேந்திரன், 13ஏ/2, கக்கன்ஜி நகர், சங்கரன் கோயில் - 627 756.

என்று பிரதமர் ஹிந்து 125வது ஆண்டு விழாவில் பேசியிருப்பது பற்றி...?

! எல்லைக் கோடு என்பது பத்திரிகையின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்குத்தான். அரசியலிலும் பொது வாழ்விலும் அக்கிரமம் செய்வோரைக் காப்பதற்காக அல்ல...

● ரேவதி ப்ரியன், ஈரோடு - 1

? ஜோஷி, உமாபாரதி கோஷ்டியினர் மீது சி.பி.ஐ. வழக்கை ஊர்ஜிதப்படுத்திவிட்டு அத்வானியைச் சேர்க்காதது பற்றி...?

! அத்வானி, மசூதி இடிப்பை ஊக்குவித்தார் என்று சிலரும்; அல்ல, அதைத் தடுத்து நிறுத்தவே முயன்றார் என்று வேறு சிலரும் சாட்சியம் தந்திருப்பதால், சந்தேகத்தின் பலனை அவருக்கு நீதிபதி வழங்கியுள்ளார். மற்றவர்கள் விஷயம் அப்படி அல்ல. சரியான தீர்ப்பு என்பதே என் கருத்து. இந்த முடிவுக்கு வர, மசூதி இடிப்பை அடுத்து வந்த அத்வானியின் அறிக்கைகள் துணை நிற்கின்றன.

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1

? "அ.தி.மு.க. என்ற இயக்கத்துக்கு அன்புள்ள தாயாகவும் பொறுப்புள்ள தந்தையாகவும் இருக்கிறேன்" என ஜெயலலிதா கூறியிருப்பது பற்றி...

! அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பது தெரிந்துதான் தொண்டர்கள் 'போற்றி' பாடுகிறார்கள்.



● அபாய மணி

● வீ. கல்யாணி, கீழ்நத்தம்

? இந்தக் காலத்தில் ஒரு நாத்திகர் ஆட்சிக்கு வருவது துரதிர்ஷ்டம் என்று இல. கணேசன் கருத்து தெரிவித்திருப்பது பற்றி...?

! இது ஜனநாயகம். மக்கள் விரும்பினால் இங்கு நாத்திகர் தாராளமாகப் பதவிக்கு வரலாம். ஆனால், ஆத்திகத்தை ஒடுக்குவதற்கு அவர் தம் பதவியைப் பயன்படுத்தக் கூடாது. அப்படி நடந்தால்தான் துரதிர்ஷ்டம்.

● வீ. முத்தையா, திருநெல்வேலி

? 'பாய்ஸ்' திரைப்படத்துக்குக் கிளம்பிய எதிர்ப்பு, தமிழ்த் திரையுலகை மீண்டும் ஆரோக்கியமான சூழலுக்கு மாற்றுமா?

! திரையுலகையே திருத்துவது என்பது அன்றும் இன்றும் என்றும் சாத்தியமில்லை. ஆனால் மோசமான படங்களுக்குக் காண்பிக்கப்படும் எதிர்ப்பு, ஒரு சிலராவது உயர் தரப் படங்கள் எடுக்கத் தூண்டுவதாக அமையும்.

● பா.சு. மணிவண்ணன், திருப்பூர்

? தமிழ் வளர்ச்சி என்பது தற்போது தமிழகத்தில் எந்த அளவு இருக்கிறது?

! அகராதிகள் தயாரிப்பதில் முடங்கிப் போயிருக்கிறது.

● சந்தேகத்தின் தயவு!

# குறையொன்றுமில்லை

“பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமாகதி:” என்று சஹஸ்ரநாமத்தில் வருகிறதல்லவா...? அந்த பரமாத்மா யார்? அவனை அவ்வாறு அழைப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்டால், இந்த ஐந்து மஹா யக்ஞங்களிலேயும் அவன் இருக்கிறான் - தேவதா யக்ஞம், பூத யக்ஞம், பிரும்ம யக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பித்ரு யக்ஞம் என்று எது பண்ணினாலும் அங்கு அவன் உள்ளான். அவற்றின் பலனையும் அவனே கொடுக்கிறான். அவ்வாறு கொடுப்பதனாலே அவன் பரமாத்மா.

'ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய் அவன் இருக்கிறான்' என்கிறார் ஆழ்வார்... அப்படியானால் மற்றொரு ஐந்து என்ன...?

நாம் சாப்பிடுவதையே பெரிய யக்ஞம் என்கிறது வேதம். சாப்பிடுவது வெறுமே உடம்பை வளர்த்துக் கொள்வதற்காக அல்ல... நாராயண உபநிஷத்தின் கடைசி அன்வாகம் என்ன சொல்கிறது பாருங்கள்... 'ஒரு யக்ஞம் பண்ண வேண்டுமானால் அதற்கு இடம் வேண்டாமா...? இவ்வளவு பெரிய இடத்தைக் கொடுத்திருக்கிறார் பரமாத்மா... இந்தச் சரீரம் தான் யக்ஞத்துக்கான இடம் - நமது சரீரம்!

கீதையின் பதிமூன்றாவது அத்தியாயத்தில் 'இந்த சரீரம் க்ஷேத்திரம்' என்று சொல்கிறான் பகவான்.

யக்ஞம் பண்ணக் கூடிய க்ஷேத்திரம் நம் சரீரம். இந்த யக்ஞ பூமியில், யக்ஞ வாடிகைக்கு ஒரு ஹோம குண்டம் வேண்டாமா...? அதையும் வைத்திருக்கிறான் பகவான். எவ்வளவு பெரிதாக வைத்திருக்கிறான் பாருங்கள்..! நமது வாய்தான் ஹோமகுண்டம். அதில் அக்னி - ஜிஹ்வா! நாக்கு இருக்கிறதே அது அக்னி!

அப்புறம் யக்ஞத்திலே பிரும்மா வேண்டுமே..? பிரும்மாவாக இரண்டு நேத்திரங்கள் உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

ஹோமம் பண்ண வேண்டுமானால் நீண்ட இரண்டு கரண்டிகள் வேண்டும். அதற்குத்தான் பகவான் நமக்கு இரு நீண்ட கைகளைக் கொடுத்திருக்கிறான். ஷ்ருக், ஷ்ருவம் என்று இந்தக் கரண்டிகளுக்குப் பெயர்.

இலையை ஒரு கையாலே

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பிடித்துக் கொள்ள வேண்டும். பிடித்துக் கொண்டு, 'பிராணாய ஸ்வாஹா, அபானாய ஸ்வாஹா த்யானாய ஸ்வாஹா' என்று பிராண ஆஹுதி ஆன பிற்பாடு, இந்தக் கையை அலம்பிக் கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் சாப்பிடலாம். இது நமக்குள்ளே இருக்கிற பஞ்சபூதங்களுக்கு ஆஹுதி. ஆஹுதி என்றால், இரண்டு பருக்கை சாதம் எடுத்து, பல்லில் படாமல் போட்டுக் கொள்ள வேண்டும். பெரிசு பெரிசாகப் போட்டு விழுங்கக் கூடாது.

ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறது உதாரணம் கிருஷ்ணாவதாரத்திலே... பூதனையைப் பிராணாஹுதி ஸ்தானத்தில் தான் வைத்து ஸம்ஹாரம் பண்ணினானாம் பகவான்!

- பெரிய அசுரக்கூட்டங்களைப் பின் னால் முடிப்பதற்கு இது சின்ன ஆரம்பம் என்பது போல!

ஆகவே பிராணாஹுதி இல்லாமல் சாப்பிடக்கூடாது. சிரார்த்தத்தன்று கடைசி யிலே சொல்வார்கள், இந்த மந்திரம் ரொம்ப விசேஷமான மந்திரம்... இந்த ஆத்மாஹுதிக்காக, பிராணாஹுதிக்காக பிராணாபான, தியான, உதான, ஸமானாதி வாயுக்கள் உள்ளுக்குள்ளே நல்ல முறையில் இருக்க வேண்டும். இதற்கெல்லாம் உப திருஷ்டாவான எம்பெருமானுக்கு - அந்தர் யாமிக்கு - நிவேதனம் என்று மந்திரம் சொல்லி, அந்த எண்ணத்தோடு சாப்பிட வேண்டும். அவ்வாறு சாப்பிடவில்லை யானால் அப்படிப்பட்டவன் பாபத்தையே உண்கிறான். எம்பெருமானுக்கு நிவேதன மாகத்தான் சாப்பிட வேண்டும். உள்ளே அவன் இருக்கிறான் என்கிற எண்ணத்தில் தான் சாப்பிட வேண்டும்.

ஒரு முறை கோபஸ்த்ரீகளெல்லாம் வெண்ணெய், பால், தயிரை விற்றுவிட்டுத் திரும்ப வருகிறார்கள். பிராதஹ் காலம் இவர்கள் விற்கப் போனபோது, யமுனை நதி வற்றியிருந்தது. ஆனால் திரும்பி வருகிற போது, இரு கரையும் தொட்டுப் புரண்டு ஓடுகிறது.

என்ன பண்ணுவது?... கோகுலத்துக்குத் திரும்பிப் போயாக வேண்டும். குழந்தை களெல்லாம் அழுமே! பசு கன்றெல்லாம் ஊட்ட விட வேண்டுமே? என்ன பண்ணு வது? ரொம்ப வியஸனம் அவர்களுக்கு...

அப்போது யமுனைக் கரையிலே வியா



* பாஸ்போர்ட் அலுவலகம் முன்பு தவம்

ஸர் உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த் தவுடனே ரொம்ப தைரியம் வந்துவிட்டது கோபஸ்த்ரீகளுக்கு. கிட்டே போய், காலில் விழுந்து, "சுவாமி! எங்களை எப்படியாவது அக்கரை சேர்க்க வேண்டும். நீங்கள்தான் அதற்கு வழி சொல்ல வேண்டும்'' என் கிறார்கள்.

அதற்கு வியாஸர் பதில் சொல்வதைக் கேளுங்கள்!..

''ரொம்பப் பசிக்கிறது. உங்களிடம், விற் றது போக பால், தயிர், வெண்ணெய் மீதி யிருந்தால் கொடுங்களேன்..'' என்கிறார்.

சில பேர் அவருக்கு வெண்ணெய் கொடுத்தார்கள்; சில பேர் பால், சிலர் தயிர், - எல்லாவற்றையும் நன்றாகச் சாப்பிட் டார். சாப்பிட்டுவிட்டு யமுனையில் போய் கை அலம்பிக் கொண்டு ஏப்பமும் விட்டார்.

அப்புறம் அந்த யமுனையைப் பார்த்து, "சூரிய புத்ரியே! காலிந்தி! யமுனா நதி! நான் இன்று சுத்த உபவாஸம் இருந்தது மெய்யா னால் இவர்களுக்கு வழி விடு'' என்றார்!

ஜலம் இரண்டு பக்கமும் விலகி நின்றுவிட்டது! முன்னே நடந்து போகிறார் வியாஸர். கோபஸ்த்ரீகள் எல்லோரும் பின்னால் நடந்து போகிறார்கள். அக்கரை போய்ச் சேர்ந்தவுடன் யமுனை ஜலம் கூடிக் கொண்டது!

அத்தனை பேரும் கூடையைக் கீழே வைத்துவிட்டுக் கேட்கிறார்கள்.

''பெரியவர்கள் தப்புப் பண்ணினால் தோஷம் இல்லை போலிருக்கிறது...'' என்கிறார்களாம்.

"அதென்ன...?'' என்றார் வியாஸர்.

"என்ன அநியாயம் இது! இத்தனை பால், வெண்ணெய், எல்லாத்தையும் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, 'நான் இன்றைய தினம் உபவாஸம் இருந்தது உண்மையானால்..'

## தர...தர...நற...நற...!

தென் மாவட்டங்கள் அத்தனைக்கும் பாஸ்போர்ட் பெற திருச்சிக்குத்தான் வர வேண்டும். திருச்சி பாஸ்போர்ட் அலுவலகத்தில் விண்ணப்பம் கொடுத்தால் அடையாள ரசீது பெற குறைந்தபட்சம் பன்னிரண்டு மணி நேரம் காத்திருக்க வேண்டும். இங்கே விண்ணப்பிக்க வருபவர்களை, பேருந்திலிருந்து இறங்கும்போதே கையைப் பற்றித் தரதர வென்று இழுத்துக் கொண்டு போகும் தரகர்களின் தொல்லை தாங்க முடியவில்லை என்று பொங்குகிறார்கள்.

என்று நீங்கள் சொல்கிறீர்கள்! நீங்கள் தான் சொல்கிறீர்கள் என்றால், அந்த யமுனைக்காவது புத்தி இருக்க வேண்டாமா? நீங்கள் சொன்னது போல் நாங்கள் சொன்னால் அது கேட்குமா...? உங்களுக்கு மட்டும் வழி விட்டு நிற்கிறதே!''

''நான் பொய் சொல்லவில்லையே! இன்று நான் உபவாஸம் இருந்தது மெய் தானே'' என்றார் அவர். உரையாடல் தொடர்ந்தது :

"இவ்வளவையும் சாப்பிட்டுவிட்டு உபவாஸமா!''

"நானா சாப்பிட்டேன்?..."

"பின்னே யாரு சாப்பிட்டார்கள்?"

''உள்ளுக்குள்ளே இருக்கிற அந்தர்யாமியான பகவானுக்கு நிவேதனம் பண்ணினேன். நானா சாப்பிட்டேன்!'' என்று சொல்லிவிட்டார் வியாஸர்!

ஆகையினாலே, வியாஸருடைய ஞானம் எல்லாம் பகவானுக்கு என்கிற நிலைத்த நிலையிலேயே இருக்கிறதே யொழிய, தான் சாப்பிடுகிறோம், தனக்காகச் சாப்பிடுகிறோம் என்ற அறிவே இல்லையே!

அந்த நிலையில் இருப்பவர்களுக்குத் தான் இது சித்திக்குமேயொழிய - யமுனை வழிவிடுதல் போன்றவை நடக்குமே யொழிய - இது என்னது? அது என்னது? அது ஏன் இப்படி இருக்கிறது...? என்று வெறுமே கேட்பதில் அர்த்தமில்லை.

இதனால்தான் சொல்கிறது சாஸ்திரம் - உணவிலே தோஷம் ஏதேனும் இருந்தால், நிவேதனம் பண்ணுவதற்கு முன்னாலேயே கவனிக்க வேண்டும் என்று. அன்னத்திலே ஒரே கல் இருக்கிறது. அப்போதுதான் - சாப்பிடுகிற சமயத்தில் 'இப்படிக் கல்லா?' பார்த்துப் பண்ண வேண்டாமா?' என்று பத்னியை ஒருத்தர் நிந்திக்கிறார். இது மொத்தம் பகவானுக்கு நிவேதனம் ஆகியிருக்கிறது... பகவத் பிரசாதம் ஒன்று கொடுத்தால் அதில் தோஷம் சொல்லலாகுமா?

தோஷம் தென்படுமானால், பகவானுக்கு நிவேதனம் பண்ணுவதற்கு முன்பாகவே அதைப் பார்த்து நீக்க வேண்டும் என்று சாஸ்திரம் வலியுறுத்துகிறது.

ஆகையினாலே, பிராணா, அபானா, த்யானாதி பஞ்சாஹுதிகள் ரொம்ப முக்கியம்.

சாப்பிடுகிற சமயத்திலே பரிசேஷணம் பண்ணி, மந்திரம் சொல்லி, அக்னிஹோத்ர பிரகரணத்திலே வருகிற மந்திரம், அது பகலுக்கு ஒன்று இரவுக்கு ஒன்று என தனித்தனியே இருக்கிறது... அதைச் சொல்லி ஆஹுதி பண்ணித்தான் உணவு கொள்ள வேண்டும்.

இப்படி பகலுக்கு ஒன்று இரவுக்கு ஒன்று என்று மந்திரங்கள் இருப்பதால், என்ன தெரிகிறது... மத்தியானம் சாப்பிடணும், ராத்திரி சாப்பிடணும்... மத்தியானத்துக்குள்ளே நடுவிலே சாப்பிடக்கூடாது. மத்தியானத்துக்கும் ராத்திரிக்கும் நடுவிலே சாப்பிடக் கூடாது. இடை பாரணை, கடை பாரணையெல்லாம் கூடாது.

சன்னியாசிகள் இருக்கிறார்கள் பாருங்கள்... அவர்கள் ஒரு நாளைக்கு எட்டு கவளம்தான் சாப்பிடலாம். எட்டு பிடி! அதற்கு முன்னே இருக்கிற வானப்பிரஸ்தாசிரமத்தார், ஒரு நாளைக்குப் பதினாறு பிடி சாப்பிடலாம்... அதற்கு முன்னே கிருஹஸ்தர்கள் இருக்கிறார்கள் பாருங்கள்.. அவர்கள் முப்பத்திரண்டு கவளம் சாப்பிடலாம். இந்தக் கணக்கு ஒரு வேளைக்கு என்று நினைத்துவிடக் கூடாது - இரண்டு வேளையும் சேர்த்து இதுதான்! மத்தியானம் பதினாறு, ராத்திரி பதினாறு என்று இரண்டு வேளையும் சேர்த்து முப்பத்திரண்டு கவளம்.

ஆகவே நாம் ஆகார நியமங்களிலும் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இந்தக் காலத்திலே, அந்த நியமங்களுக்கெல்லாம் லௌகிகமாகப் பெயரெல்லாம் போட்டு, இதை இதை இப்படியிப்படிச் சாப்பிட வேண்டும் என்று சொல்கிறோம். கணக்கு பண்ணுகிறோம். இதையெல்லாம் சாஸ்திரமே சொல்லியிருக்கிறது. புதிதாக நாம் இன்று கண்டுபிடித்துவிடவில்லை.

(தொடரும்)

# அடிச்சாங்க லக்கி பிரைஸ்!

ஆஹா! ரூ.50,000 புதுவை மாவட்டம் பரிசுப் போட்டி முடிவு

பாண்டிச்சேரி யூனியன் பிரதேச வாசகர்களுக்கு 'கல்கி' ஆசிரியர் குழுவின் மேல் அப்படி என்னதான் செல்லக் கோபமோ? ஏராளமான கூப்பன்களை அனுப்பி பெருமளவில் கலந்து கொண்டு, பரிசீலித்தவர்களின் கையைச் சுளுக்கெடுத்து விட்டார்கள். ஆனால் ஒரு ஏமாற்றம். 36 கேள்விகளுக்கான பதில்களையும் யாருமே சரியாக எழுதவில்லை. ஒரே ஒரு தவறான விடை எழுதிய பலரில் குலுக்கல் முறையில் ரூ.50,000 பரிசு பெறுகிறார் மணப்பட்டு வாசகி

**திருமதி க. கலா,**
**க/பெ கலியமூர்த்தி,**
**மணப்பட்டு அஞ்சல்,**
**மணப்பட்டு, பாகூர்,**
**பாண்டிச்சேரி - 607 402.**

ஒரு தவறு செய்த மற்றவர்களுக்கும், இரண்டு, மூன்று விடைகளைத் தவறாக எழுதியவர்களுக்கும் ஆறுதல் பரிசாக வானதி பதிப்பகத்தின் புத்தகங்கள் அனுப்பப்படும்.

ஆஹா! ரூ.50,000 பரிசு குவிஸ் போட்டிக்கான வினா - விடைகள்.

**குவிஸ் போட்டி - 1**

1. புதுவையில் வாழ்ந்த காலத்தில் பாரதியார் வணங்கிய முழு முதற் கடவுள் : **மணக்குள விநாயகர்**

2. புதுவை பெருமாள் தெருவில் வாழ்ந்த பிரபல 'தாஸ' கவிஞர் : **பாரதிதாசன்**

3. புதுச்சேரி என்றதும் நினைவுக்கு வரும் ஆஸ்ரமத்தின் பெயர் **ஸ்ரீ அரவிந்தர் ஆஸ்ரமம்**

4. டூப்ளேயின் பிரதம ஆலோசகரான இவரது டயரிக் குறிப்புகள் மிகப் பிரபலம் : **ஆனந்தரங்கம் பிள்ளை**

5. பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவில் முதலில் கைப்பற்றிய கிராமம் : **பொதுகே (புலிச்சேரி)**

6. பாண்டிச்சேரி அதிகாரபூர்வமாக இந்தியப் பகுதியான வருடம் : 1962.

**குவிஸ் போட்டி - 2**

1. பாண்டிச்சேரி கவர்னர் மாளிகையின் பெயர் **தி ராஜ் நிவாஸ்**

2. பாண்டிச்சேரி கடற்கரை **வங்காள விரிகுடா** கடலை ஒட்டி இருக்கிறது

3. பாண்டிச்சேரி பாரதி பூங்காவைச் சுற்றியுள்ள கட்டடங்களில் ஒரு பிரபலமான நூலகமும் உண்டு. அதன் பெயர் **ரொமெய்ன் ரோலண்ட் நூலகம்**

4. கை ரிக்ஷா, ஜட்கா வண்டி, பல்லக்கு ஆகியவற்றை ஒரே இடத்தில் பார்க்க வேண்டுமானால் பாண்டிச்சேரி **அருங்காட்சியகம்** போக வேண்டும்.

5. மாஹே, யானம் இவற்றோடு வேறொரு இந்தியப் பகுதியும் முன்பு பிரெஞ்சுக் காரர்கள் வசமாக இருந்தது. ஒரு பெண் நாயன்மாரின் பெயரோடும் தொடர்புள்ள அந்தப் பகுதி **காரைக்கால்.**

6. ஜிப்மரின் அருகிலுள்ள ஒரு குடியிருப்புப் பகுதிக்குப் பண்டைய பிரபல இந்திய வைத்திய நிபுணர் ஒருவரின் பெயர் வைக்கப் பட்டுள்ளது. அந்தப் பகுதியின் பெயர் **தன்வந்திரி நகர்.**

**குவிஸ் போட்டி - 3**

1. பாண்டிச்சேரியின் அருகிலுள்ள மண்டகப்பட்டிலுள்ள குகைக் கோவில்களை அமைத்த மன்னனின் பெயர் **முதலாம் மகேந்திர வர்மன்.**

2. பாண்டிச்சேரியின் நிறுவனரின் பெயர் (க்ளூ - அவர் பெயரில் அங்கு ஒரு தெரு இருக்கிறது) **பிரான்சுவா மார்த்தேன்.**

3. வேறு நாட்டில் பிறந்தவராயினும் பாண்டிச்சேரிக்குப் புகழ் சேர்த்த 'ஸ்ரீ அன்னை'யின்



வாழ்த்துக்கள்!

இயற்பெயர் **மிர்ரா அல்ஃபாஸ்ஸா**

4. மணக்குள விநாயகர் கோவிலுக்குச் சொந்தமான யானையின் பெயர் **லக்ஷ்மி**

5. பாண்டிச்சேரி - விழுப்புரம் பாதையில் பாண்டியிலிருந்து 15 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள பிரபல ஏரியின் பெயர் **ஊசுட்டேரி**

6. புதுவையின் தற்போதைய முதல்வரின் பெயர் **என். ரங்கசாமி**

**குவிஸ் போட்டி - 4**

1. பாண்டி கடற்கரை காந்தி சிலையைச் சுற்றி சுமார் எட்டு மீட்டர் உயரத்தில் வானைப்பார்த்தபடி உள்ள தூண்களின் எண்ணிக்கை **8.**

2. **124** நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட மண், ஆரோவில் மாத்ரி மந்திரில் உள்ளது.

3. சென்னையிலிருந்து பாண்டிச்சேரி **162** கிலோ மீட்டர் தூரம்

4. பாண்டிச்சேரி முனிசிபாலிடி **1790**ம் ஆண்டு துவக்கப்பட்டது

5. ஈஸ்வரன் தர்மராஜா கோவில் தெருவில் உள்ள கவிஞர் பாரதி அருங்காட்சியகத்தின் கதவிலக்கம் **20.**

6. பாண்டிச்சேரி பின்கோடின் முதல் மூன்று இலக்கங்கள் **605.**

**குவிஸ் போட்டி - 5**

1. பாண்டிச்சேரியிலுள்ள மெகா ஸ்டேடியத்தின் பெயர் **இந்திரா காந்தி ஸ்டேடியம்**

2. பாண்டிச்சேரியில் உள்ள தாவரவியல் (பொட்டானிகல்) பூங்கா **1826**ம் ஆண்டு உருவாக்கப்பட்டது.

3. பாண்டிச்சேரி சுற்றுலா வளர்ச்சிக் கழகம் பாண்டிச்சேரியின் **பீச்** சாலையில் உள்ளது.

4. மாஹே **கேரள** மாநிலத்திற்குள் அமைந்திருக்கிறது.

5. ஒரு காலத்தில் சுதந்திரப் போராட்ட வீரராகவும் விளங்கிய மகான் அரவிந்தர் **வங்காள** மாநிலத்தைச் சேர்ந்தவர்.

6. பாண்டிச்சேரிக்கு **ஒரு** மக்களவைத் தொகுதி மட்டுமே உள்ளது.

**குவிஸ் போட்டி - 6**

1. ஐந்து ஆண்டுகளுக்கொருமுறை 1000 என்ற எண்ணிக்கையில் பொருள்களைப் படையல் செய்து வழிபடும் பாண்டிச்சேரியின் பிரசித்தி பெற்ற அம்மன் கோயில் **ஆயிரங் காளி அம்மன்.**

2. பிரெஞ்சு ஆட்சியை மையமாகக் கொண்ட 'வானம் வசப்படும்' நூலை எழுதியவர் **பிரபஞ்சன்.**

3. பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவில் முதலில் கைப்பற்றிய கிராமம் **பொதுகே** (ஒருக்லூ - இதன் பெயர்தான் புதுச்சேரி என மருவியது என்பவர்கள் உண்டு).

4. மணக்குள விநாயகரைப் போற்றி நான்மணிக்கடிகை எழுதியவர் கவிஞர் **பாரதியார்.**

5. ஒரு காலத்தில் **கோட்டை**யாக விளங்கி 1761ல் பிரிட்டிஷாரால் தரை மட்டமாக்கப் பட்ட இடத்தில்தான் இன்று கவர்னர் மாளிகையின் முன்னாலுள்ள பாண்டிச்சேரி பூங்கா உள்ளது.

6. பாண்டிச்சேரியில் பொது தபால் அலுவலகம் **ரங்க பிள்ளை** தெருவில் உள்ளது.



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** நீங்க திருப்பதிக்கு எஸ்டிடி போட்டு வெங்கடாசலபதிகிட்ட டைரக்டா எதையும் கேக்கலாம்கற ரேஞ்சுக்கு தெய்வ அனுகூலம்ங்க. அப்புறம் என்ன, எதிரிகள், எதிர்ப்புகள் எல்லாம் அடக்கி வாசிக்க, ஆபீசில பிரச்னை பண்றவங்ககூட ஒத்து ஊதுவாங்க. ஆடை ஆபரணச் சேர்க்கை, வீட்ல சுபமங்கள காரியம், குதூகலம்தான்.

**ரிஷபம் :** அனுகூலமான நேரம்தான். உத்யோகத்தில ஏதாவது பிரமோஷன் எதிர்பார்த்திருந்தீங்கன்னா இந்த வாரம் ட்ரீட் கொடுக்க வேண்டிவரும். டிராவல்ஸ், ஜவுளி, ஹோட்டல், உணவுப் பொருள் விற்பனை, இந்த வகை வியாபாரிகளுக்கு யோகம்தான்.

**மிதுனம் :** உத்யோகஸ்தர்களுக்கு சக ஊழியர்களோட சப்போர்ட் இலோ கணக்கில் கிடைக்கும். தூரத்தில ஏதோ பிரமோஷன்கூட வராப்ல தெரியுது. தொழில், வியாபாரம், கலைத்துறை, அழகு சாதனம், பத்திரிகை - இந்த ஏரியாக்காரர்களுக்கு லைட்டா தொட்டுக்க கொஞ்சம் கொஞ்சம் லாபங்கள் உண்டு.

**கடகம் :** தெளிவா இருந்து மத்தவங்களைக் குழப்புவீங்க. தாராளமான பண நடமாட்டம், பேச்சு, எல்லாமாச் சேர்ந்து வெற்றிகளைக் குவிக்கப் போவுது. உத்யோகத்தில கொஞ்சம் சுசமுசா இருக்குங்க. உஷாரா இருந்தா சமாளிச்சுடலாம். கெமிக்கல்ஸ், மருந்து, எலெக்ட்ரிகல்ஸ், கமிஷன் ஏஜென்ஸி - இவங்களுக்கு லாபம் நிச்சயம்.

**சிம்மம் :** நீங்க எதிர்பார்த்த வெளிநாட்டு விசா வந்துகிட்டே இருக்கு. கொடுக்கல் வாங்கல்ல லாபம் வரும். உலோகம், எண்ணெய், கெமிக்கல்ஸ் வகையறா லாபம் கொடுக்கும். கலைத்துறைக்காரங்க கண்ணைத் திறந்து தேடினா சான்ஸ் எதிரில நிக்கறது தெரியும். குடும்பத்தில் அமைதியும் நிதானமும் இருக்கற மாதிரிப் பாத்துக்கோங்க.

**கன்னி :** வெற்றி காத்திருக்கு. உத்தியோகத்தில ஏதோ புதிய மாற்றமும் வர்றதா தெரியுது. ஜாக்கிரதையா, நிதானமா கையாளுங்க. நீங்க கேட்ட பேங்க்லேருந்து கூப்பிட்டு கடன் தரப் போறாங்க. குடும்பத்தில் கொஞ்சம் அப்படி இப்படி இருந்ததெல்லாம் சமாதானமாயிடும். பெண்களுக்கு எதிர்ப்புகள் மறைஞ்சு போயிடும்.

**துலாம் :** உத்யோக வகையில எதிர்ப்புகள் மறையும், கொஞ்சம் அனுகூலமான சூழல் உண்டாகும். பழைய கடன்கள் மெல்ல மறையும். சுய தொழில், இயந்திரம், கமிஷன், பொன், வெள்ளி போன்ற தொழில் பண்றவங்களுக்கு லாபம்தான். கலைத்துறைக்காரங்க திடீர் சான்ஸ் பெறுவாங்க. குடும்பத்தில இனிமையும், சந்தோஷமும் நிறையும்.

**விருச்சிகம் :** உத்யோகத்தில எல்லா வகையிலும் முன்னேற்றம்தான். சாமர்த்தியமா நடந்துக்குங்க. இயந்திரம், உலோகவகை, எலக்ட்ரானிக்ஸ், இண்டஸ்ட்ரீஸ், கமிஷன் வகை வியாபாரங்கள் 'ஓஹோ' தான். பத்திரிகை, புத்தகம், நாடகம், ஓவியம் இந்த லைன்ல இருக்கறவங்களுக்கும் 'ஆஹா'தான்.

**தனுசு :** தெய்வீக ஈடுபாடு, பயணம், வெற்றி, தாராளமான பண நடமாட்டம்னு சுகமா இருக்கும். உத்யோகத்தில் சுதந்திரமா செயல்படற மாதிரி உயர் பதவி கிடைக்கும். கூட்டுத் தொழில், காண்ட்ராக்ட்ஸ், கமிஷன் வகை வியாபாரம் லாபமா நடக்கும். கலைத்துறைக் காரர்களுக்கு பெயர், புகழ் வரப்போகுது. குழந்தை பிறக்கற வாய்ப்பும் இருக்கு. பெண்களுக்கு உற்சாகம் பொங்கும்.

**மகரம் :** உத்யோகச் சிக்கல்களைக் கூட இதே வேகத்தில தீர்த்துக் கட்டுவீங்க. புதிய உத்யோகம் முயற்சி பண்ணறீங்களா? ஜமாய்ங்க. கலைத்துறைக்காரங்களுக்கு வசதி கூடும். சுய தொழில் பண்றவங்களுக்கு ஒரு சில குழப்பங்கள் தீர்ந்து போகும். குடும்பத்தில செலவு கொஞ்சம் ஜாஸ்திதாங்க.

**கும்பம் :** வெற்றி, சந்தோஷம், பண நடமாட்டம்னு இருந்தாக் கூட அடிக்கடி கோயிலைத் தேடிப் போற மாதிரிதான் இருக்கு. உத்யோகத்தில மறைவிலே எதிர்த்தவங்க மறைஞ்சே போவாங்க. வெளியூர் போறதானா போயிட்டு வாங்க, நல்லதுதான். இரும்பு, இயந்திரம், தோல், எண்ணெய், மருந்து வகையில லாபம் உண்டு. குடும்பத்தில எல்லாமே ஸ்வீட்டா நடக்கும்.

**மீனம் :** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சி இந்த வகையில ஈடுபடறவங்களுக்கு ஒரு வெற்றி கிடைக்கப் போகுது. புதுசாவாவது ஏதேனும் கண்டுபிடிச்சிடுவாங்க. உத்யோகத்தில இருக்கறவங்களுக்கு மேலதிகாரிகளோட பாராட்டு கிடைக்கும். பொன், வெள்ளி, நகைகள் தொழில்ல இருந்தா நல்ல லாபம் வரும். வழக்கமா போய்வர கோயிலுக்குப் போய் வாங்க.

**அக்னிசர்மா பக்கம்**

**அக்டோபர் 1 முதல் 7 வரை**

# அமுதசுரபி



## தீபாவளி மலர்

2003

# எதிர்பாராததை
# எதிர்பாருங்கள்!

விலை ரூ.60/-

மலர் அனுப்புவதற்கான செலவு ரூ.15/-




அமுதசுரபி,

A-7,இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் (கிழக்கு), சென்னை- 600 102.

தொ.பே. 2628 6869 / 7879 தொலைநகல்: 2628 3366

email: amudhasurabi@shriram.com

# கிராமம் நகரம் மாநகரம்

**க**டந்து வந்த பாதைகளை
காற்றுடன் பேசிக் கொண்டிருக்கிறது
குடிசைக் கூரையில் சைக்கிள் டயர்
- இது சமீபத்தில் நான் எழுதிய கவிதை

சைக்கிளைக் காதலிக்காத சிறுவர்கள் உண்டா? கிராமம் நகரம் மாநகரம் என எல்லாச் சாலைகளிலும் மடி நிறைய மனிதர்களை ஏற்றிக் கொண்டு, இரும்பு கங்காருவைப் போல, தாவிச் செல்கிறது சைக்கிள்.

சைக்கிளுக்கும் நமக்குமான உறவு குழந்தைப் பருவத்திலேயே தொடங்கிவிடுகிறது. காலத்தின் பழுப்புக் கறை படிந்த புகைப் பட ஆல்பத்தை, மூன்று சக்கர சைக்கிள் மேல் அமர்ந்தபடி பால் பற்கள் தெரியச் சிரிக்கும் குழந்தைகளின் படங்களே கௌரவப்படுத்துகின்றன.

சைக்கிள் ஒரு சொந்த சகோதரனைப் போல நமக்கு வழிகாட்டுகிறது. சதைப் பிடிப்பற்று ஒல்லியாக இருக்கும் அதன் எளிமையான வடிவம், நமக்குள் எந்தத் தாழ்வு மனப்பான்மையையும் கிளப்புவதில்லை.

சைக்கிளில் இருக்கும் மணி நம்மை ஒரு இசைக் கலைஞனாக்குகிறது. அதன் மிதிகட்டைகள் காலுக்குக் கீழே பூமி நழுவிச் செல்லும் அதிசயத்தை நமக்கு கற்றுத் தருகின்றன. அலுமினிய முயலைப் போல கண்ணாடிக் கண்களிலிருந்து ஒளிக் கற்றைகளை வெறியேற்றும் அதன் டைனமோ விளக்கு, நமக்கான பள்ளங்களை கவனப் படுத்துகிறது. எதிர்க்காற்று உந்தித் தள்ள முன்னேறிச் செல்லும் சைக்கிள்களே, வாழ்க்கை குறித்த நமது சந்தேகங்களைத் தவிடு பொடியாக்குகின்றன. நம்மால் நாம் முன்னேறுகிறோம் என்ற உணர்வே சைக்கிள் மீதான நம் இச்சையை அதிகமாக்குகிறது. எல்லாவற்றிற்கும் மேல் சைக்கிளை நாம் நேசிக்கும் காரணம், சைக்கிள் நம்மைப் போலவே சுவாசிக்கிறது. காற்றில்லாத மனிதனைப் போலவே, காற்றில்லாத சைக்கிளும் பயணத்தை முடித்துக் கொள்கிறது.

**நா**ன் மூன்றாவது படிக்கும்போது சைக்கிள் விடக் கற்றுக் கொண்டேன். எனக்குக் கற்றுக் கொடுத்தவன் ஐந்தாவது படிக்கும் எங்கள் தெருப் பையன். வாடகை சைக்கிளுக்குப் பத்துப் பைசா, அவனுக்குப் பத்துப் பைசா (குரு தட்சணை) என உடன்படிக்கை



செய்தாயிற்று. எங்கள் கிராமத்திலேயே ஒரே ஒரு வாடகை சைக்கிள் நிலையம் தான் இருந்தது. சங்கர் சைக்கிள் கடை. ஏழெட்டு பெரிய சைக்கிள்கள். ஒன்றிரண்டு சின்ன சைக்கிள்கள். ஏகப்பட்ட சைக்கிள் பாகங்கள், பஞ்சர் ஒட்ட ஒரு தண்ணீர்த் தொட்டி. இவையெல்லாம் சேர்ந்த ஒரு சைக்கிள் கடை. எந்த சைக்கிளுக்கும் கேரியர் கிடையாது. ஒவ்வொரு சைக்கிளுக்குப் பின்னாலும் சங்கர் என்று எழுதி, ஒன்று, இரண்டு என்று நம்பர் போட்டிருக்கும். ஹயர் சைக்கிள் கடை என்பது நாளடைவில் அய்யர் சைக்கிள் கடை ஆகிவிட்டது. பிரேக் ஒயரே பூணூலாக அய்யர் சைக்கிள்கள் சாலைகளை வலம் வந்து கொண்டிருந்தன.

ஒரு ஞாயிறு மதியம் வீட்டில் அனைவரும் உறங்கிய பிறகு, அப்பாவின் சட்டைப் பையிலிருந்து இருபது காசுகளைத் திருடிக் கொண்டு சைக்கிள் பழக ஆரம்பித்தேன். ஒரு மணி நேரம் வாடகைக்கு எடுத்த சைக்கிளில் நாற்பது நிமிஷத்துக்கு மேலாக அந்தப் பையனே ஓட்டினான். "முதல்ல நான் ஓட்டுறதை கவனிச்சுப் பாரு" என்றான். கடைசி பத்து நிமிடத்தில் என்னை சைக்கிள் மீது அமர வைத்து பிடித்துக் கொண்டான். "முதல்ல பேலன்ஸ் பண்ணணும்... பயப்படக் கூடாது" என்றபடி அவன் என் முதுகெலும்பில் கை வைக்க... உடம்பெல்லாம் உதறி, செங்கல் குவியல் மீது தேய்த்துக் கொண்டே விழுந்தேன். கைகளில் சிராய்ப்பு... வலது கால் முட்டியில் பலத்த அடிபட்டு இரத்தம் கொட்டியது. பார்ப்பதற்கு எளிமையாக இருந்த குட்டி சைக்கிளின் தொழில் நுட்பம், சரிந்து படுத்தபடி என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது. நொண்டிக் கொண்டே வீட்டுக்குச் சென்றேன். இப்படியாக என் முதல் சைக்கிளாற்றுப் படை முடிந்தது.



# 10

நா. முத்துக்குமார்

அடுத்த வாரம் என் ஆர்வம் அறிந்து அப்பாவே சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொடுத்தார். என் இடுப்பைப் பிடித்துக் கொண்டு, சைக்கிளின் கூடவே அப்பா ஓடி வர... சைக்கிள் முன்னேறிக் கொண்டிருந்தது. திடீரென்று பின்னால் திரும்பிப் பார்க்க... அப்பா இல்லை. நான் மட்டுமே சைக்கிளை ஓட்டிக் கொண்டிருந்தேன். பயமும், பரவசமும் ஒன்று சேர, கீழே விழுந்தேன். இப்போது அடிபடவில்லை. சைக்கிளின் மர்மங்கள் பிடிபடத் தொடங்கிவிட்டன. அதற்கு பிறகு, அப்பாவின் பெரிய சைக்கிளில் நேரம் கிடைக்கும் போதெல்லாம் கால் பெடல், அரை பெடல், முக்கால் பெடல், குரங்கு பெடல் என பல பெடல்களைக் கடந்து, என் சைக்கிள் சரிதம் முழு பெடலை வெற்றி கொண்டது.

கிராமத்தில் சைக்கிள் விடப் பழகியவர்கள், உலகில் எந்த மூலையிலும் எந்த வாகன நெரிசலிலும் சைக்கிள் ஓட்டலாம் என்பது என் கருத்து. இரண்டு பக்கமும் வயல்வெளிகள் சேறுடன் காத்திருக்க... ஒல்லியான வரப்புகளின் மேல் சைக்கிள் ஓட்டிப் பழகிய கால்களின் பலத்துடன் இதைச் சொல்கிறேன்.

கிராப் வெட்டிய ராணுவ வீரர்களைப் போல வரிசையாக பனை மரங்கள் நின்றிருக்க... ஏரிக்கரையில் செம்மண் மேட்டின் மேல், ஒற்றையடிப் பாதையில் தனிமையாக சைக்கிள் ஓட்டிச் செல்வதைவிட, உலகில் வேறு சுகம் இருக்க முடியாது. நீங்களும், உங்கள் சைக்கிளும் மட்டுமேயான உலகம் அது. வேறு எந்த வாகனத்தை விடவும் சைக்கிளில் எனக்குப் பிடித்தது... சைக்கிளுக்கும் நமக்கும் உருவாகும் தனிமையான தோழமை. ஆளற்ற இரவுகளில் பூச்சிகளின் சப்தம் பயமுறுத்த, வெளிச்சமற்ற சாலைகளில் மனதுக்குப் பிடித்த பாடலை முணுமுணுத்தபடியே சைக்கிள் மிதித்துச் செல்லும் வானவில் தருணங்களே... காயங்களின் தழும்புகளுக்குப் போராடும் உத்வேகம் அளிக்கின்றன.

சைக்கிளால் அடையாளப்படும் மனிதர்கள் நம் வாழ்வில் நிறைய உண்டு. அவர்கள் முகமும் தோற்றமும் மனத்தில் விரியும்போது, அவர்களுக்கு அருகில் ஒரு சைக்கிளும் நின்றிருக்கும். மஞ்சள் வெளிச்சத்தில் புறப்பட்டு உஷ்ணம் ஏறிய வெளிச்சத்தில், வியர்வையுடன் கடிதம் சுமக்கும் தபால்காரர்கள். மஞ்சள் வெளிச்சத்தில் புறப்பட்டு, மஞ்சள் வெளிச்சத்திலேயே திரும்பி வரும் ஒற்றை ரோஜாப்பூ செருகிய கொண்டை போட்ட ஆரம்பப் பள்ளி டீச்சர்கள். உறை கத்தி வடிவில் தெருத் தெருவாய் கூவி குச்சிஸ்பி ஐஸ் விற்பவர்கள் என, நிறைய நபர்கள் நம் கனவுகளிலும் சைக்கிளுடனே வருவார்கள்.

மாநகரத்துச் சாலைகளில் ஓட்டும்போது, நூல் பிடித்த மாதிரி ஒரே நேர்க்கோட்டில் ஓட்ட வேண்டும். கொஞ்சம் நகரலாம் என்று நினைக்கும் போது நம்மை உரசிக் கொண்டு ஒரு கனரக வாகனம் செல்லும். இப்படிச் சென்னையின் சாலைகளில் நூலிழையில் நானும் எனது சைக்கிளும் நிறைய மரணத்திலிருந்து தப்பித் திருக்கிறோம்.

முதன் முதலில் நான் சென்னையில் சைக்கிள் ஓட்டியபோது, சிக்னல் விளக்குகளின் வழிகாட்டுதலில் மிரண்டு, அண்ணா சாலைக்கு வந்துவிட்டேன். அண்ணா சாலையின் நான்கு வழிப் பாதைகளின் விதி அறியாத காலம் அது. கைகள் உதற, சாலையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். நடைபாதை ஓரமாக சைக்கிளைத் தள்ளிக் கொண்டு, சற்றுத் தூரத்தில் தெரிந்த சுரங்கப் பாதையில் சைக்கிளைத் தூக்கிக் கொண்டு இறங்கத் தொடங்கினேன். மூச்சு வாங்கிக் கொண்டு சாலையின் மறுபக்கம் அடையும் வரையில் சுரங்கப் பாதையில் இருந்த அனைவரும் என்னை ஆச்சரியமும், கிண்டலும் கலந்த பார்வையில் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்குத் தெரியுமா எங்கள் கிராமத்திலேயே நான்தான் சைக்கிள் ஹீரோ என்று?

(மீண்டும் சந்திப்பேன்)

---

"எவனோ கூட்டத்திலிருந்து ஒத்தைக்கால் செருப்பை வீசிட்டான் தலைவா!"

"அதோட ஜோடி செருப்பு வர்ற வரைக்கும் பேச்சை நிறுத்திடாதே!"

- ஜி. சுந்தரராஜன்



